KALKI 28.2.93

ரூ. 3.00

# கல்கி

## தண்ணீர்ப் பஞ்சத்தில் திணறும் சென்னை!



வீரச் செயல் புரிந்ததற்கான முதலமைச்சரின் விருது இருபத்தைந்து வயது லோகநாதனுக்கு வழங்கப்பட்டது. என்ன வீரச்செயல்? சொல்கிறார் அவரே :

# வீரச் செயலுக்கு முதல்வரின் விருது!

"தென்பெண்ணை ஆறு எங்கள் மணம்பூண்டி கிராமத்தை ஒட்டி ஓடுகிறது. 'வெண்ணெய்



உருகுமுன் பெண்ணை பெருகும்' என்பது பழமொழி. நவம்பர் பதினேழாம் தேதியும் அப்படித்தான் - காலை எட்டு, ஒன்பது மணி இருக்கும்; திடீரென்று வெள்ளம்!

"ஆற்றைக் கடக்க ஒரு தரைப் பாலம் உண்டு. அதில் வழக்கப்படி, நடந்தும், சைக்கிளிலுமாக மக்கள் போய்க் கொண்டிருந்த போதுதான் திடீரென்று வெள்ளம். பலரும் தப்பித்துக் கொண்டு போய்க் கரையேறி விட்டாலும், சைக்கிளில் பாலத்தைக் கடந்து கொண்டிருந்த இரண்டு இளைஞர்கள் மட்டும் சிக்கிக் கொண்டு விட்டார்கள்.

"காரணம், அவர்கள் 'டபுள்ஸ்' சென்று கொண்டிருந்த சைக்கிளின் செயினில் ஏதோ சிக்கல். சைக்கிளைத் தூக்கிக் கொண்டு, வேகமாய் ஓட முடியாததால் தரைப் பாலத்தையொட்டி இருந்த ஒரு மின்சார விளக்குக் கம்பத்தில், ஒரு கயிறு கொண்டு, சைக்கிளைக் கட்டி விட்டு, கம்பத்தைச்சுற்றி அமைக்கப்பட்ட சிறு சிமெண்ட் பீடத்தின் மீது ஏறி நின்று கொண்டு விட்டார்கள்.

"வெள்ளத்தில் இருவர் சிக்கிக் கொண்ட விஷயம் பரவி, ஊரே பரபரப்பு அடைந்தது. போலீஸ்காரர்களும், தீயணைப்புத் துறையினரும் வந்தார்கள். என்ன

# சொல் விளையாட்டு-2 போட்டி முடிவு

முதல் போட்டியில் ''சினிமா நினைவு'' என்ற விடையை எளிதாகப் பலரும் எழுதியது போலவே, இரண்டாவது போட்டியிலும் ''பாவம் பாதசாரி'' என்ற விடையைப் பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் சரியாகவே எழுதிவிட்டனர். மிகவும் குறைவாகவே இருந்த தவறான விடைகளை ஒதுக்கிவிட்டு இரண்டாவது போட்டியில் பின்வரும் பத்து பேர் குலுக்கல் முறையில் தலா ரூ. 25 பரிசு பெறத் தேர்ந்தெடுக்கப்பட்டனர் :

1. எம். டி. அரசு, உதவி வரைவாளர் (தொ) கோட்டப் பொறியாளர் அலுவலகம், கரும்புச் சாலை அபிவிருத்தித் திட்டம், 98, பொன்னகர், 3வது கிராஸ், திருச்சி - 1.

2. ஆர். ராஜாராமன், 81, சோலையப்பன் தெரு, கும்பகோணம் - 612 001.

3. ச. ஆனந்த், 38, அழகேசன் ரோடு எண் : 2, சாய்பாபா காலனி, கோவை - 641 011.

4. ரங்கநாயகி நாராயணன், 74, லட்சுமி நகர், போரூர், சென்னை - 600 016.

5. ரத்தினம், C/o. சுப்ரமணி, 82, பட்டு நூல்காரன் தோட்டம் ஆறாவது தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

6. வி. எஸ். கலைச்செல்வி, 49, டி. எஸ். வி. கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

7. ஜி. வளர்மதி சத்யா, தெ. 566/2, புவனேஸ்வரி நகர், பெரியாக்குறிச்சி, நெய்வேலி - 607 802.

8. உமா சங்கரி, 8, பாரதி தெரு (செங்குந்தர் ஹைஸ்கூல் எதிரில்), ஈரோடு - 638 001.

9. பி. பிரேமா, 804, மேட்டு பிள்ளையார் கோயில் தெரு, தஞ்சாவூர் - 613 001.

10. டி. எஸ். பிருந்தா, 9A/4, சப்தகிரி அபார்ட்மெண்ட்ஸ் முதல் மாடி, டாக்டர் சுப்பராயன் நகர் ஐந்தாவது தெரு, கோடம்பாக்கம், சென்னை - 600 024.

செய்தால் சிக்கிக் கொண்டவர்களைக் காப்பாற்றலாம் என்று எல்லாரும் யோசித்துத் திணறிக் கொண்டிருந்தார்கள்.

''மின்சாரத்தை நிறுத்தி விட்டு, மின் கம்பியில் தொங்கியபடியே சென்று, சிக்கிக் கொண்டவர்களைக் காப்பாற்றும் எண்ணத்துடன் ஒருவர் செயல்பட 'பட்'டென்று கம்பி அறுந்து விட்டது!

''தெப்பம் தயாரித்து, சிக்கிக் கொண்டவர்களைக் காப்பாற்ற ஐந்தாறு இளைஞர்கள் தயாராயினர். ஆனால் இத் திட்டமும் நிறைவேறவில்லை.

''எனக்கு ஒரு ஐடியா. ஒரு மெக்கானிக் ஷெட்டுக்குப் போய், இரண்டு காற்றடைத்த லாரி டியூபுகள் கொண்டு வந்தேன். இரண்டு டியூப்களையும் நன்றாகக் கயிற்றால் சேர்த்துக் கட்டினேன். ஒரு டியூபை என் இடுப்பில் மாட்டிக் கொண்டு விட, மிதந்தவாறு நீரின் ஓட்டத்தோடு போனேன். இடையில் ஒரு சுழலில் சிக்கியபோதிலும் டியூப் கை கொடுத்தது. அவ்வப்போது சற்று நீச்சலடித்து இரண்டு பேரும் சிக்கிக் கொண்ட கம்பத்தை நோக்கிச் சென்றேன்.

''அவர்களுக்கு ஒரே ஆச்சரியம். இருவரில் ஒருவரை, நான் இருந்த டியூபுக்குள்ளேயே நுழைத்துக் கொண்டு இன்னொருவரை இன்னொரு டியூபுக்குள் நுழையச் செய்து, மூவரும் மிதக்க ஆரம்பித்தோம், நீரோட்டத்தோடு.

''ஏற்கெனவே நண்பர்களிடம், எங்கே வந்து நான் கரையேறத் திட்டமிட்டிருக்கிறேன் என்று சொல்லியிருந்ததால், நான் சொன்னபடி, அரகண்டநல்லூரில் உள்ள பாறைப் பகுதியில் காத்திருந்தனர்.

''ஆனால் பாதி தூரத்திலேயே இரண்டு டியூப்களையும் இணைத்திருந்த கயிறு அறுந்து போய் விட, நாங்கள் பிரிந்து விட்டோம். என்றாலும் தைரியம் கூறி இரண்டாவது டியூபில் இருந்த இளைஞருக்கும் கைகொடுத்து இழுத்துக் கொண்டு போய்க் கரையேறினேன்.

''எல்லாரும் பாராட்டினார்கள். தெ.ஆ. மாவட்டக் கலெக்டர் ராமகிருஷ்ணன் எனக்கு விருது வழங்குவதற்காகத் தமிழக அரசுக்குச் சிபாரிசு செய்தார். குடியரசு தின விழாவில், முதலமைச்சர் ரொக்கப் பரிசும், மெடலும் அளித்தார்.''

லோகநாதன், எம்.ஏ. கிரிமினாலஜி படித்தவர். வேலை கிடைக்காத காரணத்தால், வெள்ளைக் காலர் வேலைதான் பார்க்க வேண்டும் என்று பிடிவாதமாயிராமல் மெக்கானிக்காக வேலை பார்க்கிறார். ''முதல்வரிடம் வேலை கேட்டு ஒரு மனு கூடக் கொடுத்திருக்கிறேன். பார்ப்போம்'' என்கிறார்.

- எஸ். சந்திரமௌலி

# ஆபீஸ் பையன் எழுதுகிறான்...

'விஸ்டன்' பொஸ்தக ஆசிரிய ஐயா வுக்கு,

வணக்கமுங்க. உங்களைப் பத்திப் பேப்பரிலே படிச்சேங்க. கிரிக்கெட் சம்பந்தமான எல்லாப் புள்ளி விவரங்களையும் அப்பப்ப கரெக்டா தொகுத்து நீங்க போட றீங்களாம். கிரிக்கெட்காரங்களுக்கு உங்க பொஸ்தகம் பைபிள் மாதிரின்னு சொல் றாங்க. ரொம்ப சந்தோசங்க.

கல்கத்தாவிலே கிரிக்கெட் மேட்சைப் பார்க்க லட்சம் லட்சமா ஜனங்க கூடறாங் களே, அதையெல்லாம் நீங்க ரெக்கார்டா ஒப்புக்கிறதில்லேன்னு சொன்னாங்க. எப்பவோ ஒரு வாட்டி ஆஸ்திரேலியாவுக் கும் இங்கிலாந்துக்கும் நடந்த போட்டிம் போது கூடின கூட்டம்தான் உலக ரெகார் டுன்னு நீங்க சொல்றீங்களாம். இதப் பத்திச் சில பேர் முணுமுணுக்கிறாங்க. நான் சொல் றேங்க -

நீங்க சொல்ற கணக்குதாங்க கரெக்டு. இப்பக்கூடப் பாருங்க, மெட்றாஸ் சேப் பாக்கிலே நடந்த டெஸ்ட் மேட்சுக்கு 40000 பேர் வந்ததா சில பேர் உங்களாண்டை கதை வுடுவாங்க. அதையெல்லாம் கணக் கிலே எடுத்துக்காதீங்க. உண்மையான கணக்கு நான் கொடுக்கிறேன் உங்களுக்கு.

மொத்தம் வந்திருந்தவங்க 40000-னே வச்சுக்குங்க. அதிலே ஓசிப் பாஸ்லே வந்தவங்க 8000. அதைத் தள்ளிட்டா மீதி 32000.

கிரிக்கெட்டைப் பார்க்காமல் அழகான பொண்ணுங்களை லைட் அடிச்சிட்டிருந்த பசங்க 6973. தங்களை லைட் அடிக்கிறாங் கன்னு அந்தப் பசங்களைத் திருப்பி முறைச்ச பொண்ணுங்க 6973. இந்த 13946-தள்ளிட்டால் மீதி என்ன? 18054.

குழந்தை பாத்ரூம் போகணும்னு அழுத தாலே அதை வெளியிலே அழைச்சிட்டுப் போன அப்பாங்க 3340. தள்ளுங்க. மிச்சம் என்ன வருது? 14714.

குழந்தையை அழைச்சிட்டுப் போன வீட்டுக்காரரை இன்னும் காணலியேன்னு அவரைத் தேடிக்கிட்டுப் போன மனைவி மாருங்க எண்ணிக்கை 3262. இதைக் கழிச்சிட்டால் மீதி 11452.

மூட்டை மூட்டையாய்க் கட்டி எடுத்திட்டு வந்திருந்த தீனிங்களைத் தீர்க்கிறதி லேயே மொத்த நாளையும் ஓட்டிட்டவங்க ஒரு 3056. இதைத் தள்ளிட்டால் மிச்சம் 8396.

பாட்டி செத்திட்டதா சொல்லி லீவு போட்டு மேட் டுக்கு வந்திட்டு, எங்கே மேனேஜர் கிஷேஜர் வந்து தொலைச்சிடுவாரோன்னு வாசல் பக்கமே பார்த்திட்டிருந்தவங்க 4023. கழியுங்க. மீதி 4373.

எந்தப் பொம்பளை என்ன புடைவை கட்டிட்டு வந்திருக்கிறான்னு கணக்கெடுத் திட்டிருந்த லேடீஸ் 1327. அவங்களைத் தள்ளிட்டால் மிச்சம் 3046.

மேட்சுக்கு லேட்டாய் வந்திட்டு, உட் கார நல்லதா ஒரு இடம் நாள்பூரா தேடித் தேடி, கடைசியிலே ஆட்டமே முடிஞ்சு போயிட்டுதுன்னு தெரிஞ்சு வீட்டுக்குத் திரும்பினவங்க 1500. அதைக் கழிச்சிட்டால் மிச்சம் 1546.

கீழே விழுந்திட்ட பாப்கார்ன பொட் டலத்தைத் தேடிட்டிருந்தவங்க 380. கடன் கொடுத்த ஆளு முன்சீட்டிலே உட்கார்ந் திருக்கிறதைப் பார்த்ததும் பேப்பராலே மூஞ்சியை மறைச்சிட்டவங்க ஒரு 440. ஊதல் சத்தம், ஜால்ரா சத்தம், வெடிச் சத்தம் இதுங்களாலே காது வலி ஏற்பட்டு டாக்டர் வூட்டுக்கு ஓடிட்டவங்க 350. ஏரோப்ளேன் பண்ணி விடறதுக்காகவே மேட்சுக்கு வந்த ஸ்டூடண்டுங்க 375. இதையெல்லாம் கழிச் சிடுங்க.

மீதி இருக்கிறது ஒண்ணே ஒண்ணு தாங்க. அது நான்தாங்க.

இப்படிக்கு,
ஆபீஸ் பையன்.



## நீங்கள் கேட்டவை

– தராசு

● ரா. நாச்சிமுத்து, போடிநாயகனூர்.

*? 'காங்கிரஸ் ஒரே கட்சியாக உள்ளதா? அல்லது இரண்டாக உடைந்து விட்டதா?' என முதல்வர் ஜெயலலிதா சட்டசபையில் கேள்வி எழுப்பினாரே?*

! கேள்வி அல்ல அது: கேலி. தோழமைக் கட்சியை அவர் இப்படி வாரி விட்டிருக்கவும் வேண்டாம்; இப்படி கிண்டலுக்கு ஆளாக அவசியமின்றி காங்கிரஸும் நன்கு இட்டமிட்டுச் செயலாற்றி இருக்கலாம்.

● ஆர். முத்துக்குமார், அரசன்குளம்.

*? அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழக மாணவிகள் 'கொடைக்கானலுக்குப் போக மாட்டோம்' என்று போராட்டம் நடத்துவது சரிதானே?*

! எம்.ஜி.ஆர். கொடைக்கானலில் ஆரம்பித்தார்; கருணாநிதி சென்னைக்குக் கொண்டு வந்தார்; மறுபடி ஜெ கொடைக்கானலுக்கு மாற்றுகிறார் என்ற அரசியல் பந்தாடல்களை ஒதுக்கி விடுங்கள். சென்னையில் இருந்தால் மாணவிகளுக்கும் ஆசிரியைகளுக்கும் வசதி என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் பத்தோடு பதினொன்றாக இன்றி, அன்னை தெரசா பல்கலைக் கழகம் பின்தங்கிய மகளிரிடையே ஆய்வு செய்து அவர்கள் மேம்பாட்டுக்கு உதவ வேண்டும் என்றால் கொடைக்கானல் நல்லதொரு தேர்வு.



● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

*? பிளவுபட்ட தமிழக காங்கிரஸை ஒன்று சேர்த்த பெருமை ஜெயலலிதாவைச் சாருமா?*

! அங்கே ஒட்ட வைத்து விட்டு, இங்கே கத்தரித்துக் கொண்டு விடப் பார்க்கிறாரே!

● உஷா கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

*? கல்யாண வீடுகளில் காலணி திருட்டுப் போனதைத் தடுக்கத் தங்கள் கைவசம் ஐடியா உண்டா?*

! நமது செருப்பை வேறு ஒருவர் அணிந்ததும் அது "பீப், பீப்" ஒலி எழுப்பும் நாள் வெகுதூரத்தில் இல்லை. கொஞ்சம் செலவாகும். ஆனால் இன்று காலணிகள் ரூ 400 - 500 என்று விற்கும் போது இதற்கு அவசியத் தேவையும் இருக்கும். எத்தனையோ எலெக்ட்ரானிக் சாதனங்கள் உருவாகி வரும் போது, இது ஒன்று சாத்தியமில்லாமலா போய் விடும்!

● ஆர். உமா, திருச்சி.

*? ஜூன் மாதம் முதல் பார்கள் மூடப் பட்டு விடுமாமே?*

! திறப்பது - மூடுவது; திறப்பது - மூடுவது என்ற துக்ளக் தர்பார்தான் தமிழகத்தைக் குட்டிச்சுவராக்கிக் கொண்டிருக்கிறது. அரைகுறை காரியங்களால் பிரயோஜனமில்லை. பரிபூரண மதுவிலக்கு, அதனை உறுதியாக அமுல்படுத்துவது என்ற கொள்கைதான் தமிழகத்தை மேம்பாடடையச் செய்யும்.

● எஸ். பாலாஜி, சென்னை – 1.

*? நேரு ஸ்டேடியம் இனிமேல் பராமரித்தலில் சீர் கெடுமோ?*

! சரியாகச் சொன்னீர்கள். நம் நாட்டின் பழக்கமே அதுதான். பெரிசு பெரிசாகக் கட்டி விடுவோம்; பாராமரிக்க மாட்டோம். அதற்கென வருவாய் உருவாக்கி அதற்கே செலவிட மாட்டோம். பண்டையக் கோயில்கள் முதல் இன்றைய வள்ளுவர் கோட்டம் வரை அதே கதைதான். நேரு ஸ்டேடியத்தின் கதியும் அதுவாகத்தான் போகிறது!

● ஏ. எம். பழனிசாமி, கோவை.

*? வெளிநாட்டிலிருந்து கொண்டு வரும் 35 பொருட்களுக்கு சுங்கத் தீர்வையை இந்திய அரசு குறைத்துள்ளது நல்ல செயல் தானே?*

! அரசுக்கு வரும்படி தாராளமாகக் கிடைக்கும் என்பது ஒருபுறமிருக்க, போட்டா போட்டியில் தரமான தயாரிப்புக்கள் உள்நாட்டில் உருவாக வேண்டிய நிர்ப்பந்தம்.

● த. குணசேகரன், கவுந்தம்பாடி.

*? நல்ல நண்பர்களை எதற்கு ஒப்பிடலாம்?*

* புதிய கூட்டணி?





✱ கிண்டல்

✱ சீர்கெடுமா?

! மனச்சாட்சிக்கு.

● சிவகுமார், திருமருகல்.

*? தங்கள் மனத்தை மிகவும் பாதித்த சம்பவம்?*

! மயிலை தெப்பக்குளத்தில் மூழ்கி மரண மடைந்த சிறுவர்கள். ஒருவன் காப்பாற்றப் பட்டது சற்றே ஆறுதல் ஆயினும் புதிதாக நீர் நிரப்பியுள்ள போது இன்னும் கொஞ்சம் முன்னெச்சரிக்கையாக நிர்வாகம் செயல் பட்டிருக்கலாம்.

● ஏ.ஜி.கே. சுந்தரம், எம்.கே. பாளையம்.

*? அடுத்த பிறவி என்று ஒன்று இருந்தால் எங்கு பிறக்க விரும்புவீர்கள்?*

! அடுத்த பிறவி இல்லாமலிருக்கும் அள வுக்கு வாழ்வது சிறந்த வாழ்க்கை - இது நமது முன்னோர்கள் நம்பிக்கை. அவ்வாறே வாழ்ந்து விடத்தான் எண்ணம். இதையும் மீறி மறுபிறவி என்று இருந்து, பிறக்கத்தான் வேண்டும் என்றால் இங்கேயே பிறப்பது கேவலமில்லை. எனக்கு மகிழ்ச்சியே.

● கே. ஆர். ராமச்சந்திரன், சென்னை.

*? 'டி. எஸ். பார்த்தசாரதி தமிழாக்கம் செய்தபின் தியாகராஜ கிருதிகளுக்கு இன் னொரு தமிழாக்கம் சரஸ்வதி மஹால் செய்ய வேண்டுமா?'' என்கிறீர்கள். திருக் குறளுக்குத்தான் பரிமேலழகர் உரை எழுதி விட்டாரே, இன்னொரு உரை எதற்கு?*

! தனி மனிதர்கள் சொந்தப் பொறுப்பில் ஆர்வம் மேலிட்டுச் செய்வதற்கும் அரசு (வரிப்பணம்) உதவி பெற்று நிறுவனங்கள் செய்வதற்கும் வித்தியாசம் உண்டு என்று எண்ணுகிறேன். தமிழுக்கும் மக்களுக்கும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்க, செய்ததையே செய்வானேன் என்ற நோக் கம்தான். மற்றபடி சரஸ்வதி மகால் அறிஞர் களை மதிக்காதவனல்ல நான்.

● கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

*? பாரதிய ஜனதா - அ.தி.மு.க. கூட்டணி ஏற்பட வாய்ப்புள்ளதாக பா.ஜ.கட்சி பொதுச் செயலாளர் கோவிந்தாசார்யா கூறுகிறாரே?*

! 'என் எதிரியின் விரோதி என் நண்பன்' என்ற ரீதியில் காங்கிரஸுடன் அ.தி.மு.க. வின் கூட்டணி முறியும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கிறார். ஆனால் தமிழக காங் கிரஸின் பரிதாப நிலைக்கு பி.ஜே.பியும் தள்ளப்படுவதை அவர் விரும்பினா லொழிய இது சரியான முடிவு அல்ல. காங் கிரஸ் போலவே பி.ஜே.பிக்கும் நாடாளு மன்றத்தில்தான் கண். அதற்காகச் சுயமரி யாதை உள்பட எதையும் இழக்கத் தயாரா கிறார்கள்.

● இரா. ரெங்கசாமி, வடுகபட்டி.

*? தமிழக அரசியலில் அதிக ஆதிக்கம் செலுத்துபவர் யார்?*

! மிஸ்டர் மறியல். எதிர்க்கட்சியானாலும் மறியல், கதவடைப்பு, போராட்டம். ஆளும் கட்சியானாலும் (மத்திய அரசை எதிர்த்து) அதே அதே! ஆக்கபூர்வ சிந்தனை, செயல்பாடு என்பதே இல்லாது போய் விட்டது. மறியல் செய்து மக்களைக் கவர் வதே காரியம் என்றாகி விட்டது.

● மு. ரவிசந்திரன், சேலம்.

*? ''காங்கிரஸ் கட்சி மட்டுமே சுதந்திரம் வாங்கித் தந்தது என்பது உண்மையல்ல'' என்று அ.தி.மு.க. அமைச்சர்கள் கூட்டுப் பேட்டியில் கூறியிருப்பது குறித்து...?*

! இன்னும் கொஞ்ச நாள் பொறுங்கள்; மகாத்மாவான எங்களுடைய புரட்சித் தலைவிதான் சுதந்திரம் பெற்றுத் தந்தார் என்று கூடச் சொல்வார்கள்!

❐ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். பாலாஜி,
8/A, குட்டிமேஸ்திரி சந்து,
ஏழுகிணறு, சென்னை - 1.

# தண்ணீர்ப் பஞ்சத்தில் திணறும் சென்னை!

சென்னை, அடையாறு கஸ்தூரிபாய் நகரின் ஒருபகுதியில் ஜனவரி பத்தாம் தேதிக்குப் பிறகு சொட்டுத் தண்ணீர் வரவில்லை! அடி பம்புகள் காய்ந்துபோன வெற்று அலங்காரங்களாக வீட்டு வாசல்களில் நிற்கின்றன. பொழுது விடிந்தால் ஆண்களும் பெண்களும் குடங்களைத் தூக்கிக் கொண்டு யாத்திரை கிளம்புகிறார்கள். இப் பகுதி நான்காம், ஐந்தாம் மெயின் ரோடுகளில் வாழும் மக்களின் அசோசியேஷன் பிரதிநிதிகள் சொல்கிறார்கள் : ''மெட்ரோ வாட்டர் வட்டாரங்களில் விசாரித்தால் எங்களுக்குத் தண்ணீர் இனி வராது என்கிறார்கள். சப்ளை அளவைக் கணிசமாகக் குறைத்து விட்டதால் சென்னைக் குடிநீர் விநியோகத்தின் கடைநிலையில் உள்ள இந்த வட்டாரம் வரை வந்து சேரப் போதுமான அழுத்தம் லைன்களில் இல்லையாம். 'லாரிகளில் தண்ணீர் அனுப்பச் செய்யக் கூடாதா?' என்று கேட்டால் 'எங்களுக்கு அரசு ஆணை வரவில் லையே...' என்று பதில் வருகிறது.''



* கிருஷ்ணமூர்த்தி



* ஜெயகுமார்

இப் பகுதிகளில் வசிக்கும் பணக்காரர்கள் தனியாரிடம் லாரிகளில் தண்ணீர் வாங்கிப் பெரிய சம்ப்புகளில் நிரப்பி வைத்துக் கொண்டு உபயோகிக்கிறார்கள்.

''நாங்கள் இருநூறு - முந்நூறு கொடுத்து வாங்கும் தண்ணீர் திருட்டுப் போகிறது!'' என்று வேதனைப்படுகிறார் ஒரு வசதி படைத்தவர்.

''அபூர்வமாக என்னிக்காவது ஒருநாள் லாரி வருதுங்க - ஆனால் எங்க பகுதியில குடிசைவாழ் மக்களும் இருக்காங்க. அவங்க கூட போட்டி போட்டுக்கிட்டு தண்ணி பிடிக்க முடியலை. நம்ம வாய்ப்பு வர்றதுக்குள்ளே லாரி கிளம்பிப் போயிடுது...'' இது இன்னொரு மத்தியதர வகுப்புப் பெண்ணின் புகார்.

கிணறுகள் வற்றி விட்டன. மறுபடி பருவ மழை பெய்து, ஏரிகள் நிரம்பும் வரை குடிநீர் வாரியம் எப்படித்தான் சமாளிக்கப் போகிறதோ! மழை பொய்த்தால்...? அல்லது குறைவாகப் பெய்தால்...? நினைக்கவே பயமாக இருக்கிறது! இந்தப் பிரச்





★ ஸ்ரீனிவாசன்



னைக்கு நிரந்தரத் தீர்வு காணப்படாதது ஒரு பக்கம் இருக்கட்டும். தண்ணீர் கிடைப்பதற் கான தற்காலிக ஏற்பாடுகளிலும் பல குறை கள் :

**சா**லிகிராமத்தின் ஒரு பகுதியில் மூன்று ஸ்டீல் டாங்குகள் வைக்கப்பட்டுள் ளன. இவற்றில் ஒன்று விட்டு ஒருநாள் நீர் நிரப்புவதாக ஏற்பாடு. ''ஏ.வி.எம். ஸ்டு டியோ எதிரில் கங்கப்ப நாயுடு தெருவில் உள்ள டாங்க் பதினைந்து நாட்களாக நிரப் பப்படவில்லை!'' என்றனர் அப் பகுதி பெண்கள்.

''அப்படியே நிரப்பினாலும் டாங்கு களின் முன் தண்ணீருக்காகத் தவமிருக்க நேரமில்லாதவர்கள் ஒவ்வொரு நாளும் ஒரு குடம் தண்ணீர் பிடித்துக் கொண்டு வந்து தருவதற்கு மாதம் இருபது ரூபாய் கட்ட ணம் கொடுத்து ஆள் ஏற்பாடு செய்து கொள்கிறோம்.''

''சிலர் இந்த டாங்குகளிலிருந்து தண் ணீர் பிடித்து வண்டிகளில் ஏற்றிச் சென்று விலைக்கு விற்று விடுகிறார்கள என்பதால் தான் கங்கப்ப நாயுடு தெருவிலுள்ள தொட் டியை நிரப்புவதை நிறுத்தி விட்டார்கள்'' என்று கூறப்படுகிறதே என்ற போது, ''தண் ணீருக்குத் தேவை இருப்பதால்தானே வாங்குகிறார்கள்! எல்லோரும் லாரி லாரி யாக விலை கொடுத்து வாங்க முடியுமா? அல்லது கியூ வரிசையில் ஒரு நாளைப் போல் நின்று நேரத்தை வீணடிக்க முடி யுமா...?'' என்று பொரிந்து தள்ளினார்கள் சாலிகிராமம் பகுதி பெண்கள். இவர்களில் பலர் வேலைக்குப் போகிறவர்கள்.

ஒரு டாங்கில் சரியான மூடி இல்லாத தால் ஒரு காக்கா உள்ளே விழுந்து இறந்து விட்டதாம்! ''ஏற்கெனவே கொசுத் தொல் லையால் ஜு¯ரம், வியாதி. இன்னும் சுகா தாரக் குறைவான தண்ணீரால் வேறு நாங்கள் அவதிப்படணுமா?'' என்று மற்றொரு வேத னைக் குரல்!

**செ**ன்னை கடற்கரைக்கு அருகே உள்ள அயோத்தி குப்பம். தலையில், இடுப் பில், சைக்கிள்களில், தள்ளுவண்டிகளில் குடம் குடமாக அடுக்கிக் கொண்டு பெண்



★ சேஷாத்ரி வடிவமைத்த 'ஃபில்டர்'



✱ எம். ஆர். எல்லின் தண்ணீர் சுத்திகரிப்பு நிலையம்

கள் கடற்கரை நோக்கிப் படையெடுத்துக் கொண்டிருந்தார்கள். இப் பகுதியில் வீடுகளும் குடிசைகளுமாக 1200 குடியிருப்புகள் இருந்தும் காலை ஒன்பது மணிக்கு ஒரே ஒரு லாரித் தண்ணீர்தான் வருகிறதாம்.

''ஆளுக்கு இரண்டு குடம் தண்ணீர் பிடிப்போம். வாரத்துக்கு ஒருமுறைதான் குளிக்கிறோம்!'' என்கிறார்கள்.

அயோத்தி குப்பம் பகுதியில் உள்ள கிணற்றைத் துப்புறவாகத் தூர் வாரினாலே பாதி கஷ்டம் குறையும் என்கிறார்கள் இப் பகுதி ஹவுசிங் போர்டு குடியிருப்பு மக்கள். இப்போது வாரம் ஒருநாள் தண்ணீர் விடப்படுகிறதாம்!

மேற்கு மாம்பலம் ஆரிய கௌடா சாலையில் ரவிராம் அபார்ட்மென்ட்ஸ். இங்கே 28 ஃப்ளாட்டுகள் உள்ளன. இவற்றின் தலைவர் ராமன் சொல்கிறார் : ''ஃப்ளாட்டுகளைப் பராமரிக்க வாங்கும் 250 ரூபாய் கட்டணத்தில் பாதி வரை தண்ணீருக்கே செலவாகிறது. அப்படியும் பத்து நிமிஷம்தான் தண்ணீர் விட முடிகிறது. தண்ணீர் கஷ்டம் தாங்காமல் வீட்டை விற்று விட்டுப் போய் விடலாம் என்று பார்த்தால் அதே தண்ணீர் கஷ்டத்துக்குப் பயந்து கொண்டு யாரும் வாங்க முன்வர மாட்டார்கள்!''

நாச்சியப்பன், அடையாறு பகுதியிலுள்ள ஒரு கட்டடத்தின் அசோசியேஷன் தலைவர். தெருவிலுள்ள மெயின் லைனில் திருட்டுத்தனமாக ஓட்டை போட்டு, பலர் தண்ணீர் எடுத்துச் செல்வதாகக் கூறுகிறார். ''இவர்களுக்கு ஒழுங்காகத் தண்ணீர் கிடைத்தால் இப்படிச் செய்வார்களா?'' என்ற நியாயமான கேள்வியையும் எழுப்புகிறார். ''வரி கட்டாமல் இருந்தால் சும்மா இருக்குமா அரசு?'' என்றும் கேட்கிறார்.

நிலத்தடி நீரைச் சுத்திகரிக்கும் கருவியைத் தாமே வடிவமைத்துப் பலன் கண்டுள்ளார் திருவான்மியூர்ப் பகுதியில் வசிக்கும் கெமிகல் இஞ்சினியர் சேஷாத்ரி.

''பத்து வருடங்களுக்கு முன் இங்கே வீடு கட்டிய போது (நிலத்தடி) தண்ணீர் பயங்கரமான நிறத்தில், காடு, துர்நாற்றத்தோடு வந்தது. அதை வடிகட்டி உபயோகிக்க வாட்டர் பிரஷர் பில்டரை உருவாக்கினேன். மணல், அதற்கு மேல் கற்கள், அதற்கு மேல் ஆக்டிவேட் சார்கோல் போட்டு இதை அமைக்க வேண்டும். தெளிந்த நீர் கிடைக்கிறது. இதற்குச் சுமார் எண்ணூறு ரூபாய் தான் செலவாகிறது. தண்ணீரின் கடினத் தன்மையை நீக்க water softening unit அமைத்து இரும்புச் சத்தை நீக்கலாம். ஆனால் அதற்கு முப்பதாயிரம் ரூபாய் வரை செலவாகும்....'' என்றார்.

கடின நீர் என்ன, கழிவுநீரையே கூடச் சுத்தப்படுத்தி உபயோகிக்கும் தரத்துக்குக் கொண்டு வருவதில் வெற்றி கண்டுள்ளது எம். ஆர்.எல். நிறுவனம். தங்கள் தொழிற்சாலையின் தேவைக்காகவே இந்த முயற்சியை ஐந்து ஆண்டுகளுக்கு முன் தொடங்கினார்கள். ''கழிவுநீர் அகற்று வாரியத்திலிருந்து காடுகள், திடப்பொருள் நீக்கப்பட்ட கழிவுநீரைப் பெற்று ரசாயன மாற்றங்கள் செய்தும், ரிவர்ஸ் ஓஸ்மாஸிஸ் என்ற முறையைக் கையாண்டும் நல்ல தண்ணீர் பெறுகிறோம்'' என்றார் எம்.ஆர்.எல். தலைவர் கிருஷ்ணமூர்த்தி. இந்த முறையில் பத்து மில்லியன் காலன் தண்ணீரைப் பெற நடப்பு ஆண்டில் திட்டமாம் (92-93). இந்த முயற்சியை இரண்டு காரணங்களுக்காகப் பாராட்டலாம். தண்ணீர் பற்றாக்குறையினால் ஆலை தற்காலிகமாக மூடப்பட்டு உற்பத்தி பாதிக்கப்படுவது தவிர்க்கப்படுகிறது. சென்னைக் குடிநீர் வாரியத்துக்குக் கணிசமான அளவு தண்ணீர் மிச்சமாகிறது!

ஆனால், இந்த முறைகளால் பொது மக்களின் பிரச்னை எப்படி தீரும்?

கே.கே. நகர் எஸ். வி. லிங்கம் சாலையில் வசிக்கும் சுமதி சங்கர் தண்ணீர் கஷ்டத்தினால் வாழ்க்கை முறையே மாறி விட்டதைச் சுட்டிக்காட்டுகிறார். '' 'கார்ப்பரேஷன் குழாயில்' எப்போது தண்ணீர் வரும்னு பார்த்துக்கிட்டே இருக்கணும். ராத்திரி ஒன்பது மணிக்கு மேலேயும் வரும் - விடிகாலை நாலு மணிக்கும் வரும்... நேரம் உறுதியாத் தெரியாததாலே எவ்வளவு கஷ்டம்! சற்று நேரம் கண்ணயரக் கூடப் பயப்படணும்னா ஒரு குடும்பத் தலைவிக்கு எத்தனை 'டென்ஷன்'னு யாராவது யோசிச்சுப் பார்த்திருப்பாங்களா தெரியலை. சதா தண்ணீர் பற்றிய கவலையேதான் வாழ்க்கைன்னா அது என்ன வாழ்க்கை! என்னை மாதிரி இன்னும் எத்தனை ஆயிரம் பேர்!''

இதற்கு நேர்மாறாக உற்சாகத்துடன் ஒலிக்கும் அபூர்வக் குரல் பிரதீபா கணேச னுடையது.

''எல்லோரும் எப்பவுமே சிக்கனமாகத் தண்ணீரை உபயோகிக்கப் பழகிக்கிட் டோம். அதனால டென்ஷன் இல்லாம இருக்கு.

பிரதிபா குடியிருக்கும் ஸ்ரீவித்யா அபார்ட்மென்ட்ஸ் (மே. மாம்பலம்) வாச லில் இரண்டு சின்டெக்ஸ் டாங்குகளில் நீர் நிரப்ப எம்.எல்.ஏ. ஜெயகுமாரின் முயற்சி யால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இப் பகுதியில் அடுக்கு மாடிக் கட்டடங்கள் அதிகமாகி விட்டதால் ஆழ்துளை கிணறு களில் நீர் ஊறுவது நின்றே போய் விட்ட தாம்! எனவே, எம்.எல்.ஏ. ஜெயகுமாரின் செயல்பாட்டை நன்றியோடு குறிப்பிட்டார் இப் பகுதியில் வாழும் மற்றொருவரான சரோஜா ஸ்ரீனிவாசன்.

நிரந்தரத் தீர்வுக்கு என்ன ஏற்பாடுகள் செய்யப் போகிறது தமிழக அரசு...? என்று கேட்டால் ''ஜீவநதிகளிலிருந்து தண்ணீர் கொண்டு வர முடிந்தால்தான் தீர்வு காண லாம்' என்றார் எம்.எல்.ஏ. ஜெயகுமார். ''தற்போதைய பிரச்னையைத் தாற்காலிக மாகச் சமாளிக்க 27 கோடி ரூபாயைத் தமிழக அரசு ஒதுக்கியிருக்கிறது. செப்டம்பர் வரை நிச்சயம் தள்ளி விடுவோம்... பொது மக்கள் தங்கள் குடிநீர் தொடர்பான பிரச்னை களுக்குக் குடிநீர் வழங்கல் வாரியத்தின் மூன்று தொலைபேசி எண்களில் தொடர்பு கொள்ளலாம்'' (அந்த எண்கள் : 835312, 834436, 848488) என்றார்.

மிகவும் இக்கட்டான பதவியை இன்று வகிக்கும் ஒருவர் 'சென்னை குடிநீர் வாரியத்தின் நிர்வாக இயக்குனராகத்தான் இருக்க முடியும். அவரை - எஸ். ஸ்ரீனி வாசனை - சந்தித்த போது...

''சென்னையில் குடிநீர் விநியோகிக்க எங்களிடம் நாற்பது லாரிகளே உள்ளன. மற்ற லாரிகள் வாடகைக்கு எடுக்கப்படு கின்றன. அவை நீண்ட தூரம் ஓயாமல் ஓட்டிச் செல்லப்படுவதால் கலபத்தில் பழு தாகின்றன. ஓட்டை விரிசலாக அல்லது மூடி யில்லாமல் அவை இருந்து தண்ணீர் வீணா வதைப் பார்த்தால் எங்களுக்குத் தகவல் தெரிவிக்கலாம். உடனே ரிப்பேர் செய்ய ஏற்பாடு பண்ணுவோம்.

''சென்னை நகரின் பன்னிரண்டு லட்சம் குடிசைவாழ் மக்களும் இந்த லாரி நீரைத் தான் முழுக்க முழுக்க நம்பியுள்ளனர். நம் முதல்வர், அவர்களுக்குத் தண்ணீர் சப்ளை யை எக்காரணம் கொண்டும் நிறுத்தக் கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருக் கிறார்.

''குழாய் இணைப்பு உள்ள தனியார் வீடுகளுக்கு ஒன்று விட்டு ஒருநாள் தண்ணீர் சப்ளை செய்கிறோம். இந்த வீடுகளில் அடி பம்புகளைத் தண்ணீர் வராத நாட்களில் அடித்துப் பார்த்து அடியோடு நீரைக் காலி செய்து விடக் கூடாது. இப்படிச் செய்தால் பைப்புகளில் காற்று புகுந்து கொண்டு தண்ணீர் வரத்தைத் தடை செய்து விடும்...''

''குறிப்பிட்ட நேரத்தில் கட்டாயம் தண்ணீர் வரும்படி எல்லா பகுதிகளுக்கும் வசதி செய்ய முடியாதா...?''

''அப்படிச் செய்ய முடியாது; ஆனால் ஒரு இடத்தில் நான்கு மணி நேரமும் மற் றொன்றில் அரை மணி நேரமும் வருவதைக் கண்டறிந்து நிலைமையைச் சரிசெய்துள் ளோம். அவசர காலத் திட்டம் ஒன்று வகுத்து உள்ளாட்சித் துறை அமைச்சருடன் உரையாடினோம். அவரும் முதல்வரும் திட்டத்தில் அக்கறை காட்டி, நிதி ஒதுக்கீடும் செய்து விட்டனர். இனித் தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டியதுதான்...'' என்றார் ஸ்ரீனி வாசன்.

எதிர்காலத்துக்கான திட்டங்களையும் விவரித்தார் அவர் :

''நீர்த் தேக்கங்களின் கரைகளை உயர்த்தி வருகிறோம். இதனால் கொள்ள ளவு அதிகரிக்கும்... 25 சதவிகிதம் அதிகமாக நீர் கிடைக்கும். பூண்டியில் ஆறு இடங் களில் ஆழ்துளை கிணறுகள் தோண்ட இருக் கிறோம்... கழிவுநீரைச் சுத்திகரித்துத் தூய் மையாக்கும் ஆலைகள் நிறுவத் தனியார் ஊக்குவிக்கப்படுகிறார்கள். தனி வீடுகளில் மொட்டை மாடியிலிருந்து (மழைக் காலத் தில்) விழும் தண்ணீரைச் சாலையில் விடா மல் அந்தந்த வீட்டுக் கிணறுகளை நோக்கிப் பாயச் செய்யும் திட்டத்தைப் பிரபலமாக்கி, அமுல்படுத்த உதவப் போகிறோம். கிருஷ்ணா நதி நீர் வந்து விட்டால் அதை வீணாக்காது நிறம்பட விநியோகிக்கத் திட்டங்கள் வகுத்துள்ளோம். நகரைச் சுற்றி ஓம் வட்ட வடிவத்தில் பைப்புகளை நிறுவி, பதினாறு இடங்களில் மேல்நிலைத் தொட்டிகள் அமைத்து எல்லா இடங்களுக் கும் தண்ணீர் கிடைக்கச் செய்வோம்'' என்று நம்பிக்கையுடன் கூறினார்.

1995 இல் இந்தத் திட்டம் நிறைவேறு மாம். அந்த நம்பிக்கைதான் இன்று குடங் களைத் தூக்கிக் கொண்டு நடையாய் நடக்க, சென்னைவாசிகளுக்குத் தெம்பு அளித்துக் கொண்டிருக்கிறது!

– பானுமதி ராமச்சந்திரன்

அட்டையில் : சாரங்கராஜன், உத்ரா

அட்டை வண்ணப்படம், படங்கள் : கோபிநாத்

●● தெற்கு பசிபிக் தீவுகளில் வாழும் நீக்ரோ மக்களின் திருமணம்தான் உலகிலேயே மிகச் சிக்கனமான திருமணமாகும். மணமக்கள் இருவரும் தங்கள் ஜாதியைச் சேர்ந்த பெரிய மனிதரின் முன் நிற்பார்கள். அவர் இருவரின் தலைகளையும் முட்டச் செய்து, ''நீங்கள் கணவனும் மனைவியுமாக ஆகிவிட்டீர்கள்!'' என்பார். அவ்வளவுதான்!

- சக்தி கமலேஸ்வரன்



## ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகளின்
## ஆராதனை விழா
## திருப்பூந்துருத்தி Pin 613103
## தஞ்சாவூர் மாவட்டம்.

திருப்பூந்துருத்தியில் ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஜீவ சமாதியில் ஸ்வாமிகளின் ஆராதனை தரங்க இசை விழா இவ்வாண்டு 27.2.93 சனிக்கிழமை முதல் 1.3.93 திங்கட்கிழமை முடிய ஆராதனையுடன் ஸத்குருவின் ஆஸ்ரமத்தில் மிகச் சிறப்பாக நடைபெற இருக்கிறது. 27.2.93 ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் Dr. தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமைதாங்க பிரபல பின்னணி இசைப் பாடகர் Dr. P.B. ஸ்ரீநிவாஸ் விழாவை துவக்கி வைக்கிறார். திருமதி சிகாமணி குத்து விளக்கு ஏற்றி வைக்கிறார். சிறப்பு விருந்தினராக சென்னை தொழிலதிபர் திரு K.J. மணி பங்குகொள்ள இருக்கிறார். விழா மங்கள இசை சம்பிரதாய பஜன் மற்றும் சென்னை சாயி பக்தர்கள் குழுவினரின் வேத பாராயணத்துடன் துவங்குகிறது. சிறப்பு சொற்பொழிவாளராக தஞ்சாவூர் தமிழ் பல்கலைக் கழக துணைவேந்தர் Dr. அவ்வை நடராஜன் பேசுகிறார்.

28.2.93 இரவு 7:45-க்கு ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி பாடல்கள் சலவை கற்களால் பொறிக்கப்பட்டு அதை திரு M. கோபாலகிருஷ்ணன், CHAIRMAN AND MANAGING DIRECTOR, INDIAN BANK, MADRAS, அவர்கள் திறந்து வைக்கிறார். திரு T. ஷண்முகராஜேஸ்வரன், I.A.S., மாவட்ட ஆட்சித் தலைவர், தஞ்சாவூர், தலைமைதாங்குகிறார். தொடர்ந்து பத்மஸ்ரீ Dr. K. J. யேசுதாஸ், அவர் சகோதரர் திரு K.J. மணி இருவர்களுக்கும் பாராட்டுதல் – By 1. திரு T.N. ராமச்சந்திரன் B.Com., B.L., 2. திரு வி. ராமமூர்த்தி I.A.S., (Principal Secretary, Government of Tamil Nadu)

1.3.93 சென்னை வித்வத் சபையின் காரியதரிசி ஸ்ரீமதி மைத்ரேயி ராமதுரை, தலைமைதாங்க பத்மஸ்ரீ லால்குடி G. ஜெயராமன் அவர்கள் காலை 10:00 மணிக்கு வயலின் இசை மேதை திரு M.S. அனந்த ராமன் அவர்களை பாராட்டி கௌரவித்தும், திரு A.R. குமார் I.A.S., Director South Zone Cultural Centre, Thanjavur, முக்கிய விருந்தினராக பங்குகொள்கிறார்கள்.

தரங்க இசை விழாவில் மூன்று நாட்களும் கீழ்க்கண்ட பிரபல இசை கலைஞர்கள் பங்குகொள்கிறார்கள்.

சங்கீத சூடாமணி திரு T.N. சேஷகோபாலன் Vizag திருமதி அருந்ததி சர்க்கார் சென்னை திரு ஏ. சுந்தரேசன் திரு T.P. வைத்தியநாதன் குளிக்கரை திரு S.P. பிச்சைலிங்கம், திரு A. ஸ்ரீனிவாச ராகவன், திருமதிகள் பிரேமா ஹரிஹரன், சுசீலா ராமன், உமா, சீதா, நிர்மலா சுந்தர்ராஜன், சுபஸ்ரீ மணி – திரு பத்மஸ்ரீ Dr. K.J. யேசுதாஸ் – திருமதிகள் ராஜலெக்ஷ்மி சந்தானம், திருமதிகள் லால்குடி லலிதா கிருஷ்ணன், லால்குடி J. விஜயலெக்ஷ்மி, திருமதி சுகந்தா காளமேகம், பம்பாய் ஜெயஸ்ரீ, திருமதி சாருமதி ராமச்சந்திரன், திரு K.V. கிருஷ்ணன், ஸ்ரீராம் கங்காதரன், S.P. ராம் சஞ்சய் சுப்ரமணியன், திரு. போரூர்குடி P.V. கணேச ஐயர்.

மற்றும் வயலின் மேதை லால்குடி திரு G. ஜெயராமன், திரு M.S. அனந்தராமன், நாகை திரு முரளிதரன், திரு V.V. ரவி, லால்குடி திரு G.J.R. கிருஷ்ணன், திருவள்ளூர் திரு பார்த்தசாரதி, திரு N.V. சுப்ரமணியம், திருமதி ராதா சுந்தரேசன்.

மற்றும் மிருதங்க வித்வான்கள் திருச்சூர் திரு நரேந்திரன், திருவாரூர் திரு பக்தவத்சலம் திரு R. ரமேஷ், திரு ஷ்யாம் சுந்தர் – திரு ராமையா – திரு விஸ்வநாதன்.

ஹரிகதா கலைஞர்கள் திரு T. N. சுப்ரமண்ய பாகவதர், திருமதி T. R. கமலாமூர்த்தி – Dr. சரஸ்வதி ராமநாதன் – செல்வி வித்யா பவானி மூர்த்தி குழுவினரால் பரதநாட்டியமும் திவ்யநாம பஜனைகளும் – சேக் சின்ன மௌலானா? 

– சேக் மெஹ்பூப் சுபானி நாதஸ்வரம் – ஆஞ்சநேய உத்ஸவத்துடன் விழா இனிது முடிவுற இருக்கிறது.

விழாவிற்கான ஏற்பாடுகளை காரியதரிசி திருப்பூந்துருத்தி V. வெங்கடேசன் கூட்டுக் காரியதரிசி L. பாலசுப்ரமணியம் மற்றும் உபதலைவர்கள் திரு R. பிரதாப்சிம் காடேராவ், தொழிலதிபர் A. R. சுப்ரமண்ய செட்டியார் கவனித்து வருகிறார்கள்.

விழாவிற்கு தாராளமாக பொருளுதவி செய்ய கீழ்க்கண்ட முகவரிக்கு அன்புடன் அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறோம்.

S. கோபாலகிருஷ்ணன்,
14, வைத்தியலிங்கம் காலனி,
கிராப்பட்டி,
திருச்சி – 620 012.

இங்ஙனம்
ஸ்ரீ தீர்த்த நாராயண ஸ்வாமிகள் ஆராதனை மஹோத்ஸவ கமிட்டியார்
திருப்பூந்துருத்தி.

# பரிசு ரூ. 250

# மீண்டும் சொல் விளையாட்டு!

முதல் இரண்டு சொல் விளையாட்டுக்களும் ரொம்பச் சுலபமாகி விட்டதால் இப்போது கடின மாக்கியுள்ளோம். விளக்கங்களின் (க்ளூ) உதவி யுடன் கட்டங்களைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள் பார்க்கலாம்.

ஒருவருக்கு மேல் சரியான விடைகளை எழுதி விட்டால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். பத்து பேருக்கு மேல் சரியான விடை எனில் பத்து பேர் குலுக்கல் முறையில் தேர்வு. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

உறைமீது 'சொல் விளையாட்டு' என்று குறிப் பிட்டு இந்தப் பக்கத்தில் அடித்தல் திருத்தல் இன்றி புதிர் பூர்த்தி செய்து விலாசம் எழுதி கத்தரித்து அனுப்பக் கடைசித் தேதி : 10.3.93

## மேலிருந்து கீழ் :

1. இவன் கனவு அல்ல; பாதங்கள் (இரு சொற்கள்)

2. இளசானாலும் கசப்பு குறையாது (இரு சொற்கள்)

3. தெருவைக் கடக்கும்போது இப்படிச் செல் (இரு சொற்கள்)

4. நீதிதேவன்; கருணைமன்னன். (இருவர்)

6. இதுவென்று தெரியாமல் காத்திருந்த பறவை (இரு சொற்கள்)

7. நடிகனுக்கு ஏற்றாற்போல் இதை உரு வாக்கி.. (இரு சொற்கள்)

12. வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படாத இதற்கு நன்றி சொல்வான் விவசாயி (இரு சொற்கள்)

14. பழக்கமில்லாவிட்டாலும் தென்னை மரத் தில் இப்படி ஏறினான் என்றால் ஆச்சர்யம்தான்.

15. சட்டசபையில் உண்டு. (இரு சொற்கள்)

17. முதலில் நம்ப வேண்டியது...

## இடமிருந்து வலம் :

5. மயில் விரும்பும் சூழலின் நிறத்தவ ளும் (மூன்று சொற்கள்)

8. நல்லதற்கே பணம் (இரு சொற்கள்)

9. காதல் வயப்பட்டால் இப்படி அலை வார்கள். (இரு சொற்கள்)

10. முடிந்து வைக்கணும் இதை. (இரு சொற்கள்)

11. தோல்விக்குச் சுலபமான காரணம் இப்படி கூறலாம் (இரு சொற்கள்)

13. இந்த நிறத்தில் சந்திரன் (இரு சொற்கள்)

15. பாடினால் இப்படி இருக்க வேண் டாமா?

16. மூளை ___ ___ ___ இருக்க வேறு உபகர ணம் எதற்கு? (மூன்று சொற்கள் 3+2+3)

18. தெருவில் அடிக்கடி நடப்பது

19. 'மறக்காமல் வணம் சேர்' என்றும் கூறலாம்! (இரு சொற்கள்)




என் பெயர் : ..........................................

விலாசம் : ..........................................

# Vமர்சனம்



பாகவதர் முதல்...



....சந்திரபாபு வரை!

## பிஞ்சு உள்ளங்களில் தூவப்படும் விஷ வித்துக்கள்!

●● தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் விளம்பரங்களில் நெளியவைப்பது அடல்ட்ஸ் ஒன்லி விளம்பரங்கள். கருத்தடை சாதனங்கள், பெண்களின் அந்தரங்க உபயோகப் பொருட்கள் உள்ளிட்ட இவ்வகை விளம்பரங்களை எதிர்த்து, பலர் போர்க் கொடி தூக்கின பின்னும், அரசு அவற்றை நீக்க முடியாதென்று சொல்லி விட்டது. அதற்கு ஆயிரம் காரணங்கள் இருக்கலாம். அவற்றில் உண்மையும் இருக்கலாம். நாம் வேண்டுவது - குறைந்தது அவ்வகை விளம்பரங்களை ஆபாசமின்றியும் இரட்டை அர்த்த வசனமின்றியும் ஒளிபரப்புங்கள் என்றுதான். டீ.வி. என்பது, குடும்பத்தினர் அனைவருக்குமான பொழுதுபோக்குச் சாதனம். நாலு வயசுக் குழந்தை, இவற்றைப் பார்த்து, கேட்டு விட்டுக் கூச்சமின்றி திருப்பி ஒப்பிக்கும் போது வேதனையாகத்தான் இருக்கிறதே தவிர இது எந்த வகையிலும் 'வளர்ச்சி' என்று தோன்றாது. பிஞ்சு உள்ளங்களில் தூவப்படும் விஷ வித்துக்கள் என்றே சொல்லலாம்.

●● சென்ற வார நாடகம் "நூலிழையில் ஒரு பந்தம்". அலுத்துப் போன, சித்தி கொடுமை பற்றின, சு. சமுத்திரத்தின் 19-ஆம் நூற்றாண்டுக் கதை. அந்தக் குழந்தையின் தத்ரூப நடிப்புக்காக மட்டும் நாடகத்தை மன்னிக்கலாம். சமுத்திரம் போன்ற முற்போக்கு எழுத்தாளரின், நிஜமாகவே முற்போக்குக் கதையாகத் தேர்ந்தெடுத்திருக்கலாமே!

●● பிறிதொரு நாடகம், ஞாயிறு மாலை. செல்வமகள். திடீர் திடீரென்று நம்ப முடியாத, அதிரடித் திருப்பங்களுடனான கரம் மசாலா. சிற்சில காட்சிகளை மட்டும் நீக்கியிருந்தால், நல்ல குழந்தைகள் படம்.

●● பண்டிதர்களின் மொழியாக மட்டும் கருதப்பட்டு வரும் சம்ஸ்கிருதம், ஒரு கிராமத்தின் பேச்சு மொழியாகவும் இருக்கிறது! துங்கபத்ரா நதிக்கரையிலுள்ள 'மதூர்' என்கிற கிராமத்தில் மேற்படி அதிசயம். பால்காரராகட்டும், தபால்காரராகட்டும், பாலகராகட்டும், பெரியோராகட்டும் சகலருக்குமான பேச்சு, பழகு மொழி இங்கு சம்ஸ்கிருதமாகவே இருக்கிறது! செவ்வாய் தேசிய நிகழ்ச்சிகளில் 'பரக்' என்றொரு சீரியல். ஆச்சர்யமான, வித்தியாசமான தகவல்களைத் திரட்டித் தரும் இந் நிகழ்ச்சியில் மேற்படி தகவல்.



நூலகவியல் மேதை

●● பாட்டும் நானே. பாவமும் நானே. தானே நடித்துப் பாடின சிலரின் படங்களிலிருந்து ஒளியும், ஒலியும். பாகவதர் முதல் சந்திரபாபு வரை, எம்.எஸ். முதல் மனோரமா வரை ஏழெட்டு பாடல்கள். காதில் ரீங்காரம் இன்னும் ஓயவில்லை. அவ்வப்போது சென்னை தொலைக்காட்சி, சில உத்தம காரியங்களையும் செய்தபடி தான் இருக்கிறது.

●● தொழில்நுட்ப சமாசாரங்களை விட்டு விடுங்கள். அவை பிரமாதமாக இருக்கலாம். ஆனால் நமது பண்பாட்டுக்குச் சற்றும் ஒத்துவராத சமாசாரங்களை நமது வீட்டுக்குள் கொண்டு வர ஸ்டார்+ஐ ஏன் அனுமதிக்க வேண்டும்? The bold and the beautiful போன்ற சீரியல்களில் பண்டமாற்று போல பெண்டாட்டி மாற்று சமாசாரங்கள் சர்வ சாதாரணமாகக் கதையாக்கப்படுகின்றன! தொடிக்கொருதரம் டைட் க்ளோஸப்பில் முத்த மழை வேறு. ஸ்டார்+ஐ இங்கு கொண்டு வர உதவும் விஞ்ஞானம், இதுபோன்ற பண்பாட்டுப் படுகொலையைத் தடுத்து வெளியேயே நிறுத்த உதவ முடியாதா?

●● அவ்வப்போது சில டாக்குமெண்ட்ரி படங்கள். குறிப்பிட வேண்டியவை இரண்டு. திருச்சியில் ஒரு புரட்சி (BHEL நிறுவனம் பற்றியது); நூலகவியல் மேதை ரங்கநாதன். எடுக்கிறபடி எடுத்தால் டாக்குமெண்ட்ரி கூட ரசனையாக இருக்கும் என்பதற்கு இரு நிகழ்ச்சிகளும் எ.கா.

– கிச்சா



# கல்கி

1993
பிப்ரவரி 28
மலர் : 51
இதழ் : 31
ஆங்கீரச
மாசி 17



## முதல்வர் உரை : மாபெரும் ஏமாற்றம்!

ஆளுனர் உரை மீதான விவாதத்துக்கு முதல்வர் அளித்துள்ள பதில் ஏமாற்றத்தையே தருகிறது. "அட, தேவலாமே, நல்ல திட்டமாயிருக்கே" என்று மகிழும்படி ஒன்றையும் காணோம். குமரிஅனந்தன் மீது முதல்வர் நடத்திய தாக்குதல் இவரது ஆத்திரம் தணியவும் குமரிக்கு மறுபடி வார்த்தை ஜாலம் பண்ணவும் ஒரு வாய்ப்பு. பத்திரிகைகளுக்குப் பரபரப்பான ஒரு மாலைச் செய்தி அவ்வளவே.

இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு தர இருபது கோடி ஒதுக்கியிருப்பதாக முதல்வர் தமது உரையில் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறார். யானைப் பசிக்கு இது சோளப் பொறி. முதல்வரின் கூற்றுப்படியே இன்று ஒரு லட்சத்துப் பத்தாயிரம் படித்த இளைஞர்கள் மாதா மாதம் ரூ 50ம் ரூ 75ம் ரூ 100ம் அவரவர் படிப்புக்கு ஏற்ப மான்யமாகப் பெற்று வருகிறார்கள். தன்மானம் இடம்தராததால் இந்த மான்யத்தைக் கைநீட்டி வாங்கக் கூச்சப்பட்டு மறுத்து வரும் இளைஞர்கள் இன்னும் பல லட்சம் பேர் இருப்பார்கள். அவ்வாறிருக்க இவர்களில் ஒரு சிலரை மட்டும் தேர்ந்தெடுத்து மதுவிலக்குப் பிரசாரகர்களாக இயங்கச் செய்து அதற்கு மான்யத்தைக் காட்டிலும் ஐம்பது சதம் கூடுதல் தொகை அளிப்பது என்ற திட்டத்துக்குத்தான் இருபது கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. மான்யம் தருவது போலவே இதுவும் விழலுக்கு இறைத்த நீராகும்.

மதுவிலக்குப் பிரசாரம் என்பது பணத்துக்காகச் செய்யக்கூடியது அல்ல. கூலிக்கு மாரடிப்பது என்பார்களே அப்படி செய்தால் அது எந்தவித பாதிப்பையும் சமுதாயத்தில் ஏற்படுத்தாது. தேர்ந்த தலைமை ஊக்கம் தர, ஆழ்ந்த ஈடுபாட்டுடன் ஆற்றப்பட வேண்டிய பொதுநலத் தொண்டு அது. சுதந்திரப் போராட்ட காலத்தில் அரசியல் நோக்குடன் சமுதாய நோக்கையும் இணைத்த அண்ணலின் தலைமையில் இங்கு ராஜாஜியும் அவரது தொண்டர்களும் எப்படியெல்லாம் மதுவிலக்குப் பிரசாரம் செய்தனர் என்பதை ஓரளவேனும் ஆராய்ந்து பார்த்தால் அது எத்தனை சிரமமான காரியம் எவ்வளவு நெஞ்சத் துணிவும் தன்னலமற்ற தொண்டுள்ளமும் வேண்டும் என்பதையெல்லாம் புரிந்து கொள்ளலாம்.

இளைஞர்கள் இன்று வேண்டுவது வேலையே தவிர பிச்சைக் காசு அல்ல. ரொம்ப வெட்கத்துடன்தான் இன்று அவர்கள் இனாம்களைப் பெற்றுக் கொள்கிறார்கள். ஆனால் இதுவே பழகிப் போய் விட்டால் கூச்சம் போய் விடும். அப்புறம் சங்கம் அமைத்து மான்யத்தை அதிகரித்துக் கொடு என்று கோஷம் எழுப்பி மறியல் செய்யும் நிலை கூட உருவாகி விடும். சோம்பலை வளர்க்கும் எந்தத் திட்டமும் அரசு மக்களுக்குச் செய்யும் துரோகமே.

இளைஞர்களுக்கு இன்று தரப்படும் கல்வி சரியில்லை. மேல்நாடுகளைப் போல் படிப்பிலே ஆர்வம் கொண்டவர்கள், தொழிலிலே நாட்டம் கொண்டவர்கள் என்று பிரித்து, தொழில் துறையிலும் இனை பிரித்து அவரவர் விரும்பும் பயிற்சி பெற வசதி ஏற்படுத்த வேண்டும். சுயச்சார்பை வளர்க்கும் கல்வி அளித்தால், உடல் உழைப்பில் பெருமிதம் கொள்ளச் செய்தால், வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்காது. அத்துடன் மெக்கானிக்குகள், பிட்டர்கள் என்றெல்லாம் உருவாகும் இளைஞர்களுக்கு நல்ல வேலை தர, தொழில் வளமும் இங்கு பெருக வேண்டும்.

8500 கோடி தொழில் துறையில் முதலீடாகும் என்று முதல்வர் கூறியிருப்பது ஓரளவு ஆறுதல் என்றாலும் இவற்றுள் எத்தனை வேலை வாய்ப்புக்களை அதிகபட்சமாக அதிகரிக்கும் தொழில்கள்; எத்தனை இயந்திரமயமானவை; படித்தவருக்கு மட்டுமே வேலை வாய்ப்பு உறுதி செய்பவை எவ்வளவு என்றெல்லாம் பகுத்தறிந்து பார்க்க வேண்டும்.

குற்றங்கள் 37000லிருந்து 34000 ஆகக் குறைந்திருப்பதோ முப்பது தொட்டில் குழந்தைகளை அரசு வளர்க்கப் போகிறது என்பதோ பொங்கலுக்கு இலவச வேட்டி சேலை என்பதோ பெருமைப்படக்கூடிய விஷயங்களே அல்ல. உப்புச்சப்பற்றவை.

முதல்வரின் கவனம் கல்விக்கு ஏற்ற வேலை வாய்ப்பு – வேலை வாய்ப்புக்கு ஏற்ற கல்வி என்பதில் இருக்க வேண்டும். இந்த இரு அம்சங்களை மையமாக வைத்து இதைச் சுற்றி மற்றவற்றைத் திட்டமிட்டால் எதிர்காலத்தில் தமிழகம் முன்னேறும். அதற்கு இன்று வித்திட்டவராக 'ஜெ' சரித்திரத்தில் போற்றப்படுவார். சும்மா அதிகாரிகள் எழுதி அளித்த புள்ளி விவரங்களை ஒப்பிப்பதில் ஒரு பயனும் இல்லை.

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. -பாரதியார்.



# 2

## இதுவரை நடந்தது

மாநில நோய்த் தடுப்பு மையத்தில் ஸ்டாக் கணக் கெடுப்பு நடக்கிறது. நியூ ரோடிராபிக் வைரஸ் என்ற ஆபத்தான கிருமிகள் அடங் கிய ஒரு குப்பி கணக்கில் குறைவது கண்டுபிடிக்கப் படுகிறது.

நடிகன் சூர்யா 'உடம்பு இளைக்க வேண்டும்' என்ற டாக்டரின் சிபாரிசின் பேரில் ஹார்ஸ் ரைடிங் பயிற்சி தொடங்க முற்படுகிறான். அழகான கறுப்பு குதிரை அவன் உபயோகத்துக்குத் தருவிக்கப்படுகிறது. பிளாக்கி என அதற்குப் பெயரிடுகிறான்.

அதிகாலை நான்கு மணிக்கு சூர்யா எழுந்தான். டிரெஸ்ஸிங் டேபிள் முன்னால் மேல் விளக்கைப் போட்டு விட்டு நின்றான். கண்ணாடியில் தெரிந்த சூர்யாவைப் பார்த்துப் புன்னகைக்க, அவனும் நகைத்தான்.

''சூர்யா!''

''ம்''

''நீ யாரு?''

''விக்ரமன்.''

''இல்லை, இப்போ நீ சூர்யா!''

''கிடையாது. இது பொய்.''

''பின்ன எதுதான் நிஜம்?''

''விருதாவூர் விக்ரமன்தான் நிஜம்.''

''விருதாவூர் ஞாபகம் இருக்கா?''

''மறக்க முடியுமா?''

''நீ ஒரு ராஜா சூர்யா!''

''ம்...''

''சக்கரவர்த்தி!''

''ம்...''

''எவ்வளவு புகழ்?''

''அதன் விலை சுதந்திரம்!''

''எத்தனை கார்?''

''கடலோரம் நடந்து எவ்வளவு நாள் ஆச்சு?''

''இதுக்கு மேல என்ன வேணும்?''

''எனக்கு வேண்டியது மனச்சாந்தி.''

சூர்யா கண்ணாடி முன்னால் அமர்ந்து தனக்குத்தானே பேசிக் கொள்வதை அவன் மனைவி இலகா கொஞ்சம் அச்சத்துடன் கவனித்தாள். கோபம் வந்து விட்டால் உண்மையில் அவன் சூர்யன். ஆனால் அமைதியாகி விட்டால் ஆழ்கடல். அவனைப் புரிந்து கொள்ள ஒரு ஜென்மம் போதாது.

''சூர்யா!'' என்றாள் மெதுவாக.

''ஹாய், ஜிங்லி'' அவன் முகம் திரும்பினான்.

''குதிரை தயாராகி விட்டது. புறப் படுங்கள்.''

''ஜிங்லி... '' நெருங்கினான்.

''ப்ளீஸ், கிளம்புங்கள்'' என்றாள் வெட்கத்துடன்.

''உத்தரவு மகாராணி!''

சூர்யா டிராக் ஸூட் அணிந்து கொண்டு பங்களாவின் பின்னால் வந்து நட்சத்திரங்கள் மின்னிய ஃப்ளோரஸண்ட் வானத்தைப் பார்த்தான். காற்றைத் தூய்மையாக உள்ளிழுத்தான். பனியின் ஜில் தென்றல். இருட்டு கலையவில்லை. தொடுவானத் தொலைவில், இன்னும் இரண்டு மணி நேரச் சிறையில் இருக்கப் போகும் மெல்லிய வெளிச்ச சாத்தியம். கிழக்கில் பிரகாசமாக மின்னிய ஒரு நட்சத்திரம் அல்லது வெள்ளி கிரகம்? இருளான குளிர் மைதானம்.

''இிஸ் இஸ் எ கிரேட் மார்னிங்!'' என்றான்.

''வணக்கம் தலைவரே.''

''அட, துரை!''

''தலைவரே, குதிரை ரெடி.'' என்றான் துரை. அவன் கை குதிரையின் கடிவாளத்தைப் பிடித்திருக்க, தலையில் மப்ளர் கட்டி, மஞ்சளாக ஸ்வெட்டர் போட்டிருந்தான்.

''ஏன்யா, குதிரைக்குக் குளிராதா?''

''தலைவருக்கு எப்பவும் டமாஸ்தான். தலைவரே, 'எங்கள் சிங்கம்' படத்துல சிறுத்தை கூட போட்டீங்களே சண்டை...

''துரை, சினிமா பத்திப் பேசாதே!''

''சரி தலைவரே!''

''பிளாக்கி, ஹவ் ஆர் யு?''

அது மென்று கொண்டிருந்தது. கவனிக்கவில்லை.

''ஏன்யா, எப்பவுமே தின்னுக்கிட்டே இருக்குது?''

''அப்படித்தாங்க. எப்பவும் தீனி தான்.''

''என்ன சாப்பிடும்?''

''கொள்ளு. காரட்டு, முள்ளங்கி, புல்லு.''

''எந்த ஊர் குதிரை இது?''

''ஊட்டிங்க. வர்ம ஜாதி. ஏறுங்க தலைவரே.''

கிருஷ்ணா டாவின்ஸி

சூர்யா குதிரை மேல் ஏறி கால்களை வளையத்தில் நுழைத்துக் கொண்டு, கிளவுஸ் அணிந்த கரங்களால் கடிவாளத்தைப் பற்றிக் கொள்ள, துரை கடிவாளத்தை ஒரு எகிறு எகிற, பிளாக்கி சுகமாக ஓட ஆரம்பித்தது. துரை கூடவே மூச்சு வாங்க ஓடி வந்தான். சூர்யாவைக் குதிரை தூக்கித் தூக்கிப் போட இடுப்பு எலும்புகள் வலித்தன. முதல் ரவுண்டிலேயே உடல் கொஞ்சம் ஆட்டம் கண்டது.

''என்னய்யா துரை! இந்தப் போடு போடுது!''

''பளகிடும்ங்க. கொஞ்சம் வாகா உடம்பைத் தூக்கிக் கொடுக்கணும். முதுகை வளைக்கக்குங்க. கழுத்தாண்டை அப்படியே சாய்ஞ்சுக்குங்க. டேய், காளி, ஓடுறா.''

''யாருப்பா அது காளி?''

''இதாங்க, குதுர.''

''சே! பிளாக்கிய்யா. அதைக் குழப்பாதே!''

''வாய்ல நுழைய மாட்டேங்குதே பேரு.''

''அப்ப சும்மா இரு. பிளாக்கி, நல்ல ரன்!''

பத்தாவது ரவுண்டில் கொஞ்சம் பழகி விட்டது. அந்த 'ஜெர்க்' இன் 'ரிதம் டைம்' பழகியதும் யாத்திரை முன்போல் கஷ்டமாக இல்லை. பிளாக்கி அருமையாக ஓடியது. 'அட, இந்த மைதானத்தைச் சுத்தணும். அவ்வளவுதான்...' என்கிற எஜமானக் கட்டளைத் தாமதமாகப் புரிந்ததும் அது பாட்டுக்கு மெஷின் போல் ஓட ஆரம்பித்தது. சூர்யாவுக்கு அந்தச் சவாரியில் இருந்த ஒருவித இதிகாசத் தன்மையும் ஆதி கால வாசனையும் மிகவும் பிடித்தது. செயற்கை மஸ்காரா மாயங்களிலிருந்து தப்பித்துக் கானக நாட்களில் நுழைந்து விட்டது போல் தோன்ற 'டார்ஸான் பாய்' பாடலை உற்சாகமாக மனசுக்குள் பாடியபடி வேகத்தைக் கூட்டினான். காற்று முகத்தை அறைந்து வழிந்தது.

''தலைவரே, ரொம்ப வேகம் வேணாம்.''

''துரை, கீப் அவே. தள்ளிப் போ!''

''தலைவரே!''

''போடா!'' குதிரையின் கீழ் வயிற்றைக் கால்களால் குத்தினான்.

துரை கலவரமாக ஒதுங்கிக் கொண்டு, வியர்வை வழிந்த உடலுடன் சடசடவென்று சூர்யா விரைவதைப் பார்த்தான். வேகம்! அதன் பெயர் சூர்யா!

பொழுது புலர்ந்து, சூரியன் மஞ்சளாகக் கதிர் பரப்பி, பறவைகள் தினத்தைத் துவக்கிய நேரம் வரை சூர்யா பிளாக்கியை விடவே இல்லை. மனமின்றிக் கீழிறங்கினான். உடல் முழுவதும் மூச்சு வாங்க நனைந்திருந்தான்.

''துரை, பிளாக்கிக்கு நிறைய தீனி போடு.''

''ஆகட்டுங்க.''

''ரம் சாப்பிடுமா இது?''

''ஹி... ஹி...''

''என்னடா?''

''நான் சாப்பிடுவேங்க.''

சூர்யா சிரித்துக் கொண்டே பங்களாவின் உள்ளே நுழைந்து பிபிஸி டீவியில் நியூஸ் பார்த்தான். சூடாகக் காப்பி குடித்து, குளித்து, பூஜையறையில் நுழைந்து அரை மணி நேரம் பூஜை செய்தான். மூன்று வயதுப் பெண் ம்ருணா வந்து கழுத்தைக் கட்டிக் கொள்ள, பதினைந்து நிமிடங்கள் அவளைக் கொஞ்சினான். பால்கனிக்குச் சென்று கேட்டிற்கு வெளியே காத்திருந்த ரசிகர்களைப் பார்த்துக் கையசைத்தான். பிரேக்ஃபாஸ்ட் சாப்பிட்டு, பி.ஏ.வை அழைத்து அவன் காண்பித்த செக்குகளில் கையெழுத்திட்டு, பார்வையாளர்களைத் தேர்ந்தெடுத்துச் சந்தித்தான். பிறகு பி.ஏ.வை அழைத்து,

''சுந்தரம்! இன்னைக்கு என்ன ஷெட்யூல்?''

''ஏ.ஆர்.எம். படம் சார். பத்து மணிக்ரூப் டான்ஸ்.''

''தாவு தீர்ந்துடும். யாரு ஹீரோயின்?''

''சௌதாமினி.''

''பேஜார்மினி. பல்லே தேய்க்

**நடிகர் நாயகம் காலத்தில் ஒரு சவஹாபி தன் மனைவியை மண விலக்குச் செய்வதற்காக நீதி மன்றம் சென்றான். நீதி மன்றத்தில் அவனைச் சந்தித்த நண்பர் ஒருவர், "நண்பரே, உங்கள் மனைவியை விவாகரத்துச் செய்யப் போவதாக அறிந்தேன். அவர் செய்த குற்றம் என்ன?" என்று கேட்டார்.**

**அதற்கு அந்த சவஹாபி, "நண்பரே! அவள் இப்போது என் மனைவி. அதனால் அவளைப் பற்றி என்னால் ஏதும் கூற இயலாது" என்றார்.**

**சில நாட்களில் மணவிலக்கு முடிந்தது.**

**மீண்டும் அதே நண்பர் இவரைக் கண்டு, "நண்பரே, இப்போதாவது**

காதுய்யா அது!''

''ஸார்! ப்ரஸ்காரங்க இருக்காங்க, ஜாக்கிரதை.''

எதிரே இருந்தவர்களில் சிலர் ஆர்வமாகப் பார்த்ததைக் கவனித்தான். எழுந்து கொண்டான். அவர்களும் எழுந்து கொள்ள, ஒரு பினால்டோகாரன் கேமரா ஆங்கிள் பார்க்க, மற்றொரு நீலச்சட்டையன், ''ஸார்! ஒரே ஒரு கேள்வி, ப்ளீஸ்!'' என்றான் அருகில் வந்து.

''சொல்லுங்க!''

''சௌதாமினி பத்தி உங்க கருத்து என்ன ஸார்?''

''நல்ல, திறமையான ஆக்ட்ரஸ்.''

''ஸார்! கொஞ்ச நேரம் முன்னாடி....

''ஒன்லி ஒன் கொஸ்டியன் மைண்ட் யூ''

சூர்யா விறுவிறுவென்று நடந்து சென்று தன்னுடைய கன்டஸா காரில் ஏறிக் கொள்ள அது காத்திருந்தது போல் 'விசுக்' கென்று ஊர்ந்து, வெளியே சென்றது.

வெளியே ஒரு கூட்டம் இவனுடைய கார் ஜன்னல் தரிசனத்திற்காகக் காத்திருந்தது. விசிலடித்தது. கை அசைத்தது. உற்சாகமாகக் கத்தியது. கார் விலகி, விரைந்தது.

''டேய் போங்கடா எல்லாரும்'' என்று தடியைச் சுழற்றினான் கூர்க்கா.

குன்றத்தூர் செல்லும் வழியில், சினிமாவுக்கென்றே நேர்க்கதரிசனத்துடன் ஏதோ பழைய ராஜா கட்டிய கோயில். அபார முன் தோற்றத்துடன் இருபுறமும் மரங்களால் 'பார்டர்' அணிந்து, குழு நடனப் பாடல்களுக்கே என்கிற பிரத்யேக முத்திரையுடன் இருந்தது. சூர்யா வந்ததும் அங்கே உயிர் பற்றிக் கொண்டது. சூர்யா வெள்ளை பேண்ட், சட்டை, இடுப்பில் சிவப்புத் துண்டு, தலையில் பச்சை ஸ்கார்ஃப், ரோஸ் பவுடர், லிப்ஸ்டிக் என்று அலங்கரித்துக் கொண்டு, குட்டைப் பாவாடை அணிந்து காமிராவிற்கு எதிரே ஆபத்தாகக் காலைத் தூக்கும் பெண்களின் நடுவே புகுந்து. ''நானே உன் ராஜா, நீதான் என் ராஜா'' என்று ரிஃப்ளெக்டர் பளிச்சில் திருப்பித் திருப்பி ஆடினான். குடை பிடித்தார்கள். ''அண்ணே, ஜூஸ்...'' முண்டியடிக்கும் மக்கள். வியர்வை. சூடு.

''சூர்யா, டேக்.''

சூர்யா தயாராகி மறுபடி ஆட, ஒரு செயற்கை சூலத்தின் அருகே 'ரிஸ்க்'காக ஒரு ரவுண்ட் அடித்த போது எதிர்பாராமல் வலது முழங்கையில் சரேலென்று அதன் கூர்முனை கோடு கிழித்தது. ரத்தம் பொங்கியது. பதறினார்கள்.

''அடடா! கட்! கட்!''

''பரவாயில்லை. ஒன்னுமில்லை.''

''என்னண்ணே இது! டேய், ஃபர்ஸ்ட் எய்ட் பாக்ஸை எடுறா, உக்காருங்கண்ணே! அடடா!''

பஞ்சு எடுத்து வந்து துடைத்தார்கள். ரத்தம் பெருகுவது குறையும் வரை துடைத்தார்கள்.

''டாக்டர் யாரும் இல்லையா இங்கே?''

''பரவாயில்லை, விடுங்க.''

அதற்குள் விஷயம் பரவி திடுதிப்பென்று ஒரு அவசர டாக்டர் முளைத்தார். கையைப் பிடித்துப் பார்த்து, சுத்தம் செய்து, சின்னதாகப் பஞ்சு வைத்துப் பிளாஸ்திரி போட்டார். ''ஒரு டெட்டனஸ் இஞ்செக்ஷன் போட்டுக்குங்க. ஸிம்பிள் ஆன்ட்டி டாக்ஸின்.''

''வேண்டாம் டாக்டர்! இதெல்லாம் ஒரு காயமா!'' என்று சிரித்தான் சூர்யா. ஷூட்டிங் தொடர்ந்தது.

அன்றிரவு. பிளாஸ்திரியைப் பிய்த்தான் சூர்யா. ரத்தம் காய்ந்து உலர்ந்திருந்தது. வலியே இல்லை. அந்த டாக்டர் ஏதோ இஞ்செக்ஷன் போட்டுக் கொள்ளச் சொன்னாரே!

சே! வேண்டாம்! இதெல்லாம் ஒரு காயம்! சூர்யா அலட்சியமாகப் படுத்துக் கொண்டான். அது ஒரு வெறும் நான்கு அங்குலக் காயம்தான். ஆனால், நான்கு அங்குல மரண வாசல்!

(தொடரும்)

கூறும், உம் மனைவி செய்த குற்றம் என்ன?'' என்று கேட்டார்.

அதற்கு அந்த சவஹாபி, ''நண்பரே! அவள் இப்போது என் மனைவி இல்லை. ஆதலால் எனக்குச் சம்பந்தமில்லாத ஒருத்தி பற்றிக் கூறுதல் முறையில்லை'' என்றார்.

– ந.க. பரமசிவம்







"இந்தப் பாடத்தை டீச்சர் எப்போ நடத்தினாங்கன் நினைவில்லையே?"
"புது மஞ்சள் சாரி கட்டிக்கிட்டு அபூர்வமா மேட்சிங் ப்ளவுஸ் போட்டுக்கிட்டு ஒரு நாள் வந்தாங்களே, அன்னிக்கு நடத்தினதுடீ இது!"





ஜியாகரஃபிக்குப் பையன் ரொம்பவே படிக்கிறான்... பயமா இருக்குங்க!



பையனை இஞ்சினியரிங்கில் சேர்க்கப் போறீங்களா, மெடிக்கலா கம்ப்யூட்டர் சயன்ஸா?



ஆறுமுகம்
மாநிலத் தலைவர்
அ.ஆ.இ.ஈ.கட்சி
நான் எப்படியும் எய்டி பர்ஸென்ட் வாங்கிடுவேன்.. நீ?...
எங்கப்பா தினமும் ஃபிஃப்டி பர்ஸென்ட் வாங்கறார். அதனாலே எனக்குக் கவலையில்லை!

# வருகிறது +௨ பரீட்சை!

சார் உங்க பள்ளிக் கூடத்திலே என் பையனுக்கு அட்மிஷன் வேணுமே?!

அட போய்யா! என் பள்ளிக் கூடத்தை வித்துட்டுத் தான் என் பையனை இஞ்சினியரிங்லே சேர்த்திருக் கேன்!

என் நிலைமைக்கு அவனை நல்ல வேலையில்தான் சேர்க்கணும்!

என்ன பாட்டி? பேரன் பாஸ் பண்ணணும்னு வேண்டுதலா?

இல்லை, நம்ம ரஜினி தம்பிக்கு ரேட் நிறையவே கூடாதுன்னு வேண்டிக்கறேன்!

பரீட்சை முடிஞ்சதும் நாம பிரிஞ்சுடுவோமே!

ஏன் பிரியணும்! ஒரே டுடோரியல்லே சேர்ந்துக்கலாமே!




## அட, அப்படியா!

!! நமது சூரிய குடும்பத்தின் மிகப் பெரிய எரிமலை செவ்வாய் கிரகத்தில் (மார்ஸ்) உள்ளது - பதினாறு மைல் உயரம், அதன் அடி வாரத்தின் குறுக்களவு 375 மைல்!

!! சூரியனின் மையப் பகுதி தண்ணீரைப் போல் நூறு மடங்கு அடர்த்தியுடையது. அதன் வெப்பம் பத்து முதல் இருபது மில்லியன் செண்டிகிரேட் வரை இருக்கக்கூடும்!

!! உலகின் மிகப் பெரிய மதவழி பாட்டுக் கட்டடம் கம்பூசியாவில் கட்டப்பட்டது. 402 ஏக்கர் பரப்பளவில் அதைக் கட்டியவர் இரண்டாம் சூரிய வர்மன். எழுபத்திரண்டு பிரதான அமைப்புக்களை உள்ளடக்கிய அக் கட்டடம் மஹாவிஷ்ணுவை வழிபடுவதற்காக கி.பி. 900 இல் கட்டப்பட்டது. அதுதான் சுற்றுலாப் பயணிகளை இன்று ஏராளமாக ஈர்க்கும் ''அங்கோர்வாட்.''

!! 8500 ஆண்டுகளுக்கு முன்னரே பதினொன்று வெவ்வேறு வகைப் பயிர்களை முறையாகப் பயிரிட்டனர் தென் துருக்கி நாட்டு விவசாயிகள். கோதுமை, பார்லி, பட்டாணி, பருப்பு போன்ற வகைகளை விளைவித்தனர்.

!! ஒரு ஸ்பூன் காபித் தூளில் உள்ளதைக் காட்டிலும் அதிக அளவு 'காஃபேய்ன்' நச்சுப் பொருள், ஒரு ஸ்பூன் தேயிலைத் தூளில் இருக்கிறது. ஆனால் நாம் டீயை நீர்க்கப் பருகுவதால், ஒரு கோப்பை காப்பியில் உள்ளதைப் போல் அறுபது சதவிகிதம் காஃபேய்ன்தான் ஒரு கோப்பை டீயில் இருக்கும். கோகோ பானம், கோலா குளிர்பானங்கள் போன்றவற்றிலும் காணப்படும் காஃபேய்னை நாம் அதிக அளவில் பருகுவதால் கவலை, எரிச்சல், அமைதியின்மை, படபடப்பு போன்றவை உண்டாகின்றன.

!! உலகில் மிக சகஜமாகப் புழங்கும் குடும்பப் பெயர் 'சாங்' என்ற சீனப் பெயர்தான். சீன மக்களுள் சுமார் பன்னிரண்டு சதவிகிதத்தினரின் பெயர் இது! மிகக் குறைவாகக் கணக்கிட்டாலும் உலகில் 104 மில்லியன் சாங்குகள் உள்ளனர்!

**சாங், சாங், 104 மில்லியன் சாங்!**

!! 1902, மே எட்டாம் தேதி மவுன்ட் பீலி எரிமலை வெடித்தது. தென்னாப்பிரிக்காவில், ஆயிரக்கணக்கான மைல் களுக்கப்பால் இருந்த பிரிட்டிஷ் இஞ்சினியர் ஜே. டபிள்யூ டன் இந்த நிகழ்ச்சியைப் பற்றித் தமது கனவு மூலமாக முன்கூட்டியே அறிந்து கொண்டார். அதைத் தொடர்ந்து பல ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு, எதிர்காலம் குறித்தும் கால ஓட்டம் குறித்தும் சில புதிய கொள்கைகளை அவர் உருவாக்கினார்.

!! ஜான் மோஃபர்த், ஆர்தர் மோஃபர்த் என்பவர்கள் இரட்டைச் சகோதரர்கள். ஒருவருடைய வாழ்க்கையில் நடந்தது அப்படியே மற்றவர் வாழ்விலும் நடந்தது. 1975 மே 22 அன்று பிரிஸ்டலில் இருந்த ஒரு சகோதரருக்குக் கடுமையான நெஞ்சு வலி ஏற்பட்டது. அவசரமாக மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். இதைப் பற்றி ஒன்றும் அறியாத மற்றொரு சகோதரர் எண்பது மைல் தூரத்தில் விண்ட்ஸரில் இருந்தார். அவருக்கும் அதே சமயத்தில் நெஞ்சு வலி. அவரும் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்பட்டார். இருவரும் ஒரே சமயத்தில் இறந்து போனார்கள்!

!! பெண் சிவப்பு கங்காருவின் இரு மடிக் காம்புகள் இரு வெவ்வேறு சத்துள்ள பாலைச் சுரக்கும். முதலில் பிறந்த குட்டி, சிறிது வளர்ந்த நிலையில் கூடுதல் புரதமுள்ள பாலைக் குடிக்கும். அடுத்ததாகப் பிறந்த குட்டி, எளிதில் ஜீரணிக்கக்கூடிய குறைந்த அளவு புரத மடங்கிய பாலை அருந்தும்.



!! பூமியில் நடமாடிய மிகப் பெரிய விலங்கு டிப்லோடோகஸ். $87\frac{1}{2}$ அடி நீளமிருந்த இந்த விலங்கின் வால் மட்டும் 45 அடி நீளம்! உடம்பில் பாதிக்கு மேல் வால்! டைனஸார்களில் ஒரு வகையைச் சேர்ந்த இந்த விலங்கு சரித்திர காலத்துக்கு முன்பு பூமியில் உலவி மறைந்து போனது.

!! விலங்குகள் உலகின் பல்வேறு உயிரினங்களுள், 4/5 பங்கு பூச்சிகளே!

தொகுப்பு : உதய்லால்

# அன்புள்ள அத்தை கண்மணி!

நீயும் மீனாட்சி பாட்டிக்கு - அதாவது உன் அம்மாவுக்கு - கண்மணிதானே! அதனாலதான் அப்படி எழுதினேன்.

நீ ஊருக்குப் போகறதைப் பத்தி எழுதியிருந்ததைப் படிக்கவே ரொம்ப ஜாலியா இருந்தது. நிஜமாகவே போனால் இன்னும் ஜாலியா இருக்கும். ஆனால் சில பேருக்கு மட்டும் ஊருக்குப் போகறதுன்னா ரொம்ப பேஜாரு - ஏன் தெரியுமா? பஸ்ஸுல கொஞ்சம் தூரம் போனாலே அவங்களுக்கு வாந்தி வந்துடும்!

எங்க ஸ்கூல்ல காஞ்சிபுரம் கூட்டிட்டுப் போனப்போ அப்படித்தான் ஒரு பையனுக்கு ஆச்சு. அவன் பெயர் சுரேஷ். பாவம்! ரொம்ப கஷ்டப்பட்டான். நாங்கள் எல்லாரும் கோவிலைச் சுத்திப் பார்க்கறப்போ பஸ்ஸுலேயே படுத்திருந்தான். மதுரம் டீச்சர் அவனுக்கு மாத்திரை வாங்கித் தந்தாங்க - சாப்பிட்டுட்டுத் தூங்கிட்டான்.

'சில பேருக்கு மட்டும் ஏன் இப்படி பஸ்ஸுல போனா வயித்தைக் கலக்குது'ன்னு எதிர்வீட்டு டாக்டர் அங்கிள் கிட்டே கேட்டேன். அவர் சொன்னது ரொம்ப ரொம்ப ஆச்சரியமாயிருந்தது.

நம்ம காதுக்குள்ளே Labyrinth - (இது அவரே எழுதித் தந்த ஸ்பெல்லிங்)-ன்னு ஒரு பகுதி இருக்காம். பஸ்லயோ, கார்லயோ, ப்ளேன்லேயோ போகும் போது நம்மைச் சுத்தி காற்று அழுத்தம் மாறுது. அப்படி மாறும் போது காதுக்குள்ளே இருக்கற லாபிரிந்தாலே அதைத் தாங்கிக்க முடியலை... அதனாலேதான் வாந்தி வரவழைக்குது அப்படின்னு டாக்டர் அங்கிள் சொன்னார்.

"வயித்துக்கும் காதுக்கும் என்ன சம்பந்தம்னு எனக்குப் புரியலை? அது மாத்திரமில்லை... ஏன் சில பேருக்கு மட்டும் இப்படி ஆகணும்"னு கேட்டேன்.

உடம்போட ஒரு பகுதியில கோளாறு வந்தா, அதனாலே இன்னொரு பகுதிக்கும் சிரமம் உண்டாகத்தான் செய்யுமாம். ஜலதோஷம் பிடிச்சா தலைவலி வர்ற மாதிரி...

சில பேருக்குத் தூசி, புகையினால சளி புடிக்கறதில்லையா... அதே மாதிரி சில பேருக்கு மட்டும் ஏற்படற அலர்ஜிதான் திடீர்னு ஒரு ஆம்.

எல்லாருக்குமே பஸ்ல போகறது அலர்ஜியாயிருந்தால் எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பார்த்தேன்... நல்ல காலமா அப்படியில்லையேன்னு ரொம்ப சந்தோஷமாயிருந்தது! பாப்புவுக்கும் எனக்கும் அந்த அலர்ஜி இல்லையேன்னு இன்னும் சந்தோஷமாயிருந்தது.

உன்,

அன்பு அருண் கண்மணி



# இழப்பு

அவள் சங்கீதம் கற்கத் தீர்மானித்தாள்.

கல்யாணமாகி விட்டது. ஒரு குழந்தையும் பிறந்து விட்டது. இனிமேல் இதெல்லாம் அவசியம்தானா? என்றாலும் அவள் தீர்மானித்தாள்.

நெய்வேலியில் அம்மா எத்தனையோ முறை கூறியிருக்கிறாள். 'ரேடியோவுடன் கூடப் பாடுகிறாயே! குரலோ நன்றாக இருக்கிறது. போய் நிர்மலா அப்பாவிடம் பாட்டு கற்றுக் கொள்ளேன். மாசம் முப்பது ரூபாய்தான்' - அப்போதெல்லாம் மறுத்து விட்டாள். அதற்கும் முன்னால் கிராமத்தில் பாட்டி கூடச் சொன்னாள். 'நம்மூர் நாதஸ்வரக்காரரிடம் போய்க் கத்துக்கோடி! நன்றாகப் பாடலாம்' என்றாள். அப்போது நாதஸ்வரக்காரர் வீட்டு நாய் பயமுறுத்தியது.

இப்போதும் கூட ஏதோ ஒன்று பயமுறுத்துகிறது. கூச்சமோ, தயக்கமோ, ஏதோ ஒன்று.

ஆனாலும் தீர்மானித்தாள்.



அவள் புகுந்த வீடு அப்படி. மாமியார் பாட்டுக் கற்றுக் கொண்டவராம். பாடிக் கேட்டதில்லை. நன்றாகப் பாடுவார் என்று கேள்விப்பட்டிருக்கிறாள். மைத்துனர், நாத்தனார் ஏன் கணவரும் கூடப் பாடுவார்கள். வாரா வாரம் பஜனை. அவர் பாடுவதை விட ஹார்மோனியம் வாசிப்பது தேவலாமென்றிருக்கும் அவளுக்கு. சென்னைக்குத் தனிக்குடித்தனம் வந்த புதிதில் அவருடைய ஹார்மோனியம் இசை மிகவும் விநோதமாக, சிரிப்பை ஊட்டுவதாக இருந்தது. பிறகு பழகி விட்டது.

கணவர்தான் பழக்கி விட்டார். முதலில் ஏதாவது ராக ஆலாபனை செய்வார். பிறகு அதே ராகத்தில் அமைந்த சினிமாப் பாடல் - தமிழோ, ஹிந்தியோ பாடி, அதை அந்த ராகத்துடன் பொருத்திக் காண்பிப்பார். முதலில் பிடிக்காவிட்டாலும் வர வர ரசிக்க ஆரம்பித்தாள். தானே ஏதாவது பாட்டுக்களைப் பாடி அவரிடம் ராகத்தைக் கேட்பாள். மெள்ள மெள்ள கர்நாடக இசைப் பாடல்களுக்கும் ராகம் கண்டு பிடிக்க ஆரம்பித்தாள்.

ஆனால், அவள் ராகம் கண்டுபிடிக்கும் விதமே அலாதி. கணவரைப் போல், ஸ்வரங்களைத் தேடி அந்த ராகத்தை இனம் காண மாட்டாள். ஒவ்வொரு ராகத்துக்கும் ஒரு மெல்லிய கோடு, இனம்புரியாத ஒரு நிறத்துடன் மனத்திற்குள்ளேயே அமைத்துக் கொண்டாள் - லைலோஃபோன் குழல்களைப் போல. ஏதாவது பாடலைக் கேட்கும் போது, அந்த ராகத்தின் சாயல் கொண்ட ஒரு இசைத் துண்டு, ஒரு மேகம் போல அவளின் கற்பனைக் கோட்டிற்குப் பொருத்தமான நிறத்தில் மிதக்கும். இப்படித்தான் அவள் ராகங்களை இனம் கண்டாள்.

இந் நிலையில் வேறு ஒரு பிரச்னை வளர்ந்தது. நிறைய ராகங்களைக் கேட்டுப் பழகியதில், ஏதோ ஒரு பாடலைக் கேட்கும் போது, மனம் அதிலேயே சிக்கி விடும். என்ன ராகம் என்று புரியாது. ஏதோ மயக்கமாக இருக்கும். பல்லில் சிக்கிய பாக்குத் துண்டு போல எரிச்சலூட்டும். என்ன ராகம் என்று அப்போதே கண்டுபிடிக்க வேண்டும் என்று மண்டையிடிக்கும். ஆனால் முடியாது. கணவர் அருகில் இல்லாவிட்டால் அவர் வருவதற்குள் பாட்டு மறந்து போயிருக்கும். பாடினாலும், அந்த சாயலைக் கொண்டு வர முடியாது.

அப்போதுதான் யோசித்தாள். ஏன் நாமே பாட்டு கற்றுக் கொள்ளக் கூடாது? எல்லா ராகத்தையும் ஸ்வரம் பிரித்துப் பாடக் கற்றுக் கொண்டால், இந்தத் தொல்லை தீருமல்லவா? ஆனால், யாரிடம் கற்பது? கணவரிடமா?

இரண்டு நாள் அவரெதிரே உட்கார்ந்து பார்த்தாள். ஸ்வரம் பாட வாய் திறந்தால் சிரிப்புத்தான் வந்தது. கூடாது என்று எத்தனையோ முறை சொல்லியும், தலையைக் கீறிக் கொள்கிற அவர் மேனரிஸம், எப்படி சலவை செய்து கொடுத்தாலும் நுனியில் அவர் அழுக்காக்கிய வேட்டி - இவை என்னதான் கவனிக்காமல் இருந்தாலும் கண்ணில் பட்டு எரிச்சலை மூட்டியதில் ஸ,பா,ஸா சொல்லாமலேயே எழுந்து விடுவாள்.

பிறகு, வேறொரு யோசனை வந்தது. பக்கத்துக் காம்பவுண்டில் ஒரு மாமி சொல்லித் தருகிறார்கள். ஃபீஸ் ஐம்பது ரூபாய் என்றார்கள். அவர்களிடம் போனாள்.

வாரம் இரண்டு கிளாஸ். ஸ,பா,ஸா, ஸரிகமபதநி... ஸ்வரங்கள், வர்ணம், கீதம், கீர்த்தனை என்று காலம் ஓடியது. ஒரு வருடம் போனது. இசை என்ற கடலைக் கடக்க முடியாவிட்டாலும், தானே தனியாகப் படகு விடுமளவு தேறினாள்.

டிசம்பர் மாதம். சில்லென்ற மார்கழிக் குளிருடன், சிந்தையை நிறைக்கும் இசை முழக்கம் எங்கும் நிரம்பியது. இசை விழாக்களுக்காக சபாக்கள் தோரணம் கட்டின. அவளுக்கும் ஆசை வந்தது. கணவருடன் கச்சேரிகளுக்குப் போனாள்.

வீட்டுக்கு வந்தாள். நிறைவாக இருந்தது. வயிறு நிறையச் சாப்பிட்டது போல, நிறையப் புத்தகங்கள் படித்தது போல... ஆனாலும், இது என்ன? அந்த நிறைவிலும் ஒரு குறை. என்ன அது?

அதைத் தேடி மீண்டும் மீண்டும் பல கச்சேரிகளுக்குப் போனாள். ராகம், ஸ்வரம், தாளம், பாடல் எல்லாம் ரசித்தாள். அலசி, அலசி, பகுத்துப் பகுத்து அறிந்தாள். ஆனாலும் திருவிழாவில் தொலைந்த குழந்தை



இரா.இந்திரா



பத்திரிகை ஆசிரியர் : ஸ்டார் டீ.வியை இப்ப நிறைய பேர் பார்க்கிறாங்க ஸார்!

எழுத்தாளர் : எப்படி சொல்றீங்க?

பத்திரிகை ஆசிரியர் : நீங்க எழுதிய ஒருகதை... ஸ்டார் டீ.வியில் வெளியாகும் ஒரு சீரியலின் அப்பட்டமான காப்பீன்னு நிறைய பேர் கடிதம் எழுதியிருக்காங்களே...!

- ராஜி ராதா



“உங்க எடை பாக்கும் மெஷினுக்குத் திமிர் அதிகங்க.”

“என்ன ஆச்சு?”

“என் எடையைப் பாக்க ஏறி நின்னு காசு போட்டால், ‘ஒருவர் மட்டுமே நிற்கவும்’னு சீட்டு வருது?

- எம். அசோக்ராஜா



“அந்த போலீஸ்காரர் உன்கிட்ட, இதை எண்ணப் போறியா, அதை எண்ணப் போறியான்னு கேட்டாரே, என்ன?”

“மாமூல் பணத்தை எண்ணி, கீழே வைக்கணுமாம்; இல்லாட்டி, கம்பி எண்ணணுமாம்!”

- சீர்காழி வி. ரேவதி

யாய், மனத்துக்குள் ஏதோ தனிமையை உணர்ந்தாள். ஏன்...? என்ன ஆயிற்று?

ஒருநாள் அவளுக்கு மிகவும் பிடித்த பிரபலமான பாடகரின் இசை நிகழ்ச்சிக்குப் போயிருந்தாள். இசை கற்குமுன்பே அவருடைய இசை நாடாக்கள், வானொலிக் கச்சேரிகள் எத்தனையோ ரசித்திருக்கிறாள். இப்போது மிகவும் உற்சாகத்துடன் போய் உட்கார்ந்தாள்.

அவரைப் பார்த்ததே, ஜென்ம சாபல்யம் போலிருந்தது. தெளிவான, வீணையிசை போன்ற குரலில் ஆரம்பித்தார் - ‘மஹா கணபதிம்’.. ராகம், தாளம், ஸ்வரம் எல்லாம் மன வரிசையில் வந்து போயின. தன்னையறியாமல் தாளம் போட்டாள். இப்படியே கச்சேரி முழுவதும்... பாடகர் மங்களம் பாடினார். கசமுச பேச்சுக்கள்... விமரிசனங்கள்... வெளியே வந்தார்கள்.

“எப்படி இருந்தது?” கணவர் கேட்டார்.

“ஓ! நன்றாக இருந்தது!” ஒற்றை வரிப் பதில். மனத்திற்குள் துளைத்தெடுக்கும் தவிப்பு. ஏதோ திருப்தியின்மை.

ஸ்கூட்டரில் வீடு வரும் வழியில் பார்த்தாள். ஒரு பையன் - பத்து வயதிருக்கும். மடியில் சின்ன டிரான்சிஸ்டர். கச்சேரியில் கேட்ட அதே குரல். கர்நாடக இசையை அடித்தளமாகக் கொண்ட சினிமாப் பாடல். பையன் மெய்மறந்து கண்மூடி லயித்திருந்தான். ஓ! மின்வெட்டு அடித்தது மனத்தில். இதுதான்! இப்படித்தானே அவளும் இருந்தாள்!

இப்போதுதான் புரிந்தது. முன்பெல்லாம், ஸ்வரம், தாளம் ஏதும் புரியாத நிலையில் இசையின் கட்டுக் கோப்பில், இனிமையில், மயங்கி ஒரு கதகதப்பை அனுபவித்தாள். தாய்மடிக் குழந்தை தாலாட்டை அனுபவிப்பது போல் அவள் இசையை அனுபவித்தாள். அதில் கணக்கு தெரியாது. சொல்லோ, பொருளோ கவலை யில்லை. இசை, அதன் இனிமை, அதுதான் தேவை. அதுதான் புரியும்.

ஆனால், இப்போது... ஸ்வரங்களின் வரிசையில், தாளத்தின் காலக் கணக்குகளில் அவளால் தோய முடிந்ததே தவிர, இசை யின் இனிமையை, ஒன்றுமறியாச் சிறு குழந்தையின் மயக்கத்தை - அவளால் பெற முடியவில்லை. இந்த இழப்பினை எப்படி.... என்ன செய்வது?

கண்ணோரம் கண்ணீர் துளித்தது.

# நைட் ஷோக்கள் நஹி!

பம்பாயின் ரீகல், நோ ஆகிய இரு தியேட்டர்களில் படம் ஓடிக் கொண்டிருக்கும் போது குண்டு வெடித்ததன் காரணமாக சிலர் காயமுற்றனர் அல்லவா? இதைத் தொடர்ந்து சினிமா தியேட்டர்களில் வசூல் மிகவும் மந்தமாகி விட்டது. குண்டு வெடிப்புக்கு முன்பு ஐம்பது சதவிகிதம் நிரம்பி இருந்த தியேட்டர்களில் இப்போது 20 - 30 சதவிகிதம்தான் கூட்டம். நாவல்டி, மெட்ரோ தியேட்டர்களில் ஜனங்கள் சோதனை செய்யப்பட்ட பின்பே உள்ளே அனுமதிக்கப்படுகிறார்கள். பெரும்பாலான தியேட்டர்களில் இரவுக் காட்சி ரத்து! இந்த ரீதியில் போனால் இழுத்து மூட வேண்டியதுதான் எனப் புலம்புகின்றனர் தியேட்டர்காரர்கள்!

### விளாசுகிறார் மஞ்சரேகர்

இந்திய அணியில் இடம் மறுக்கப்பட்டுள்ள மஞ்சரேகர் இப்போது போடு போடென்று போடுகிறார். அவர் தலைமையில் ஆடிய ஏர் இந்தியா அணி ராஷ்டிரிய கெமிக்கல்ஸ் அண்ட் ஃபெர்டிலைஸர்ஸ் அணியைத் தோற்கடித்து மஹேந்த்ரா ஷீல்டை அடைந்தது. தொடர்ந்து இங்கிலாந்து அணியினரோடு விசாகப்பட்டினத்தில் ஆடிய மூன்று நாள் மேட்ச்சில் மஞ்சரேகர் 96 ரன்கள் எடுத்து தாம் இன்னும் ஃபார்மிலிருப்பதைக் காட்டினார்!

### அமைச்சர் முகத்தில் கரி!

வன்முறைகள் ஓரளவு கட்டுப்பாட்டிற்குள் வந்துள்ளன என நினைத்தபோதே கிழக்கு பாந்த்ராவின் பெஹராம்பாடா குடிசைப் பகுதியில் நடந்த கலவரத்தின் விளைவாக இருவர் பலி! இதனை போட்டோ எடுத்து வெளியிட்டிருந்தது 'தி இண்டிபெண்டெண்ட்' பத்திரிகை. ஒரே சமயத்தில் இரண்டு நபர்கள் குத்துப்படுவதைக் காண்பித்தது அப் படம். அதனைப் போலியாகத் தயாரிக்கப்பட்ட படம் என்றும், டிசம்பர் கலவரத்தின் போது எடுக்கப்பட்ட படம் என்றும் பாபன் ராவ் பஞ்ச் பூதே (உள்ளாட்சித் துறை இணை அமைச்சர்) கூறி விட்டார்! உடனேயே இண்டிபெண்டெண்ட், அந்தப் படங்களின் தொடர்பான அத்தனை ஃப்ரேம்களையும் பிரசுரித்து, தனது படம் உண்மையானதுதான் என்று நிரூபித்து, அமைச்சர் முகத்தில் கரி பூசியது!

### அமைதி குலைப்பதில் ஆனந்தம்!

'ஹாஜி மலாங்' என்பது கல்யாண் அருகிலுள்ள ஒரு முஸ்லீம் புனித ஸ்தலம். ஹாஜி மலாங் தர்க்காவில் நடக்கும் ஏழு நாள் விழாவில் வருடந்தோறும் ஒரு லட்சம் இந்துக்களும், முஸ்லீம்களும் வருடந்தோறும் கலந்து கொள்வார்கள். ஆனால் இந்த வருடம், கூட்டம் குறைவு. காரணம் சிவசேனாவினர் அந்த ஸ்தலத்தைக் கைப்பற்றி அதன் பெயரை 'ஸ்ரீ மலாங்' என்று மாற்ற நினைத்திருந்ததுதான். தானாவின்



● சஞ்சய் மஞ்ச்ரேகர்

சிவசேனா தலைவரான ஆனந்த் டிகே (Anand Dighe) சுமார் 400 பேர்களோடு அந்த தர்க்காவிற்குள் நுழைய முயன்றார். ஆனால் அங்கு இருந்த போலீஸார் அவர்களை உள்ளே நுழைய முடியாமல் தடுத்து நிறுத்தினர். சேனாவினர் போலீஸாரின் மீது கல் எறிய ஆரம்பிக்கவும், போலீஸார் வேறு வழியின்றித் தடியடி நடத்த வேண்டி வந்தது. ஆனந்த் டிகேயையும், மற்றும் பதினைந்து பேரையும் கைது செய்தனர். இதன் காரணமாகக் கல்யாண், உல்லாஸ்நகர், தாணா, டோம்பிவிலி பகுதிகள் பதற்றநிலை அடைந்தன. போலீஸாரின் திறமையான நடவடிக்கையால் மற்றொரு அயோத்யா நிகழ்ச்சி தடுக்கப்பட்டு விட்டது!

— அம்ருதா பார்த்தசாரதி

# பாப்கார்ன் கனவுகள்

## 19

நல்வரவு. கண்ணாடித் தள்ளு கதவில் மயில் தோகை விரித்து ஆடுகிறது. தொட்டியில் குரோட்டன்ஸ் செடிகள். முகத்தருகே புஸ்ஸென்று தண்ணீர் பாட்டில். ரேடியோவில் பக்திப் பாடல். சுழலும் குஷன் நாற்காலி. வெள்ளைத் துணி போர்த்தி லக்ஷ்மிநாராயணன் உட்கார்ந்திருக்கிறான். இந்த மாதம் வில்லிவாக்கம் சலூனே போதும் என்று முடிவாகி விட்டது.

நகரத்தின் பெரிய சலூன்கள் திரையுலகப் பிரவேசத்துக்கு எந்தவித உத்திரவாதமும் அளிக்கிறதில்லை. காலண்டரில் கமல்ஹாசன் சிரிக்கிறார். கழுத்தில் தாராளமாய்ப் பவுடர் போட்டு சலூன் ஆள் வெள்ளைத் துணி உதறுகிறான். சில்லறை இல்லை. கடைப் பையன் விரலிடுக்கில் ரூபாய் மடித்து வெளியே போகிறான். நிலைக் கண்ணாடி முன் சேவல் போல் தலையசைத்து முகத்தில் திருப்தியுடன் லக்ஷ்மிநாராயணன் இறங்குகிறான்.

டீப்பாயில் தினத்தந்தியின் கடைசிப் பக்கம் கண்ணில் படுகிறது. லக்ஷ்மிநாராயணன் முகம் மாறுகிறது. ஏ.வி.எம். ஆர்.ஆர். தியேட்டரில் பாடல் பதிவுடன் படத் துவக்க விழா. கதை, வசனம், டைரக்ஷன் கொஞ்சம் நாட்களாய் அவன் அலுவலகத்துக்கு அலுப்பில் வருவதை நிறுத்தி விட்ட பிரான்ஸிஸ் ராஜ். காலை பத்து மணியளவில் பூஜை. திரையுலகப் பிரமுகர்கள் வருகை தருகிறார்கள். நேரம்தான்! சினிமாவில் நேரம் வொர்க் அவுட் ஆகி விட்டால் எதுவும் சொல்வதற்கில்லை. முழுப் பக்க விளம்பரத்தில் உள்ளங்கை அகலப் புகைப் படத்தில் தலையில் தொப்பியுடன் கூலிங்கிளாஸ் அணிந்து பிரான்ஸிஸ்ராஜ். சில்லறை வருகிறது. அதை எண்ணிப் பார்க்காமல் பையில் போட்டு லக்ஷ்மிநாராயணன் அவசரமாய்ப் புறப்படுகிறான்.

விஜயலக்ஷ்மி டீச்சர் வீட்டில் இல்லை. சாவி எதிர் வீட்டில் இருக்கிறது. ஜில்பாஸ் உடையணிந்து லக்ஷ்மிநாராயணன் கதவைப் பூட்டுகிறான். ஆர்காடு ரோடு பாலத்தில் ஆட்டோ விரைகிறது. பாலத்தின் பக்கவாட்டில் நெடுக பிரான்ஸிஸ்ராஜ் படத்தின் பெயர் விளம்பரமாய் எழுதப்பட்டிருக்கிறது. ஏவிஎம் வாசலில் துணிப் பேனரில் பிரான்ஸிஸ்ராஜ் கைகூப்பிச் சிரிக்கிறான். ஆட்டோ நிற்கிறது. குளிர்பானம் கொடுக்கிறார்கள். தொலைவில் பிரமுகர்களுடன் பிளாஸ்டிக் சிரிப்பில் பிரான்ஸிஸ்ராஜ் புகைப்படங்களுக்குப் போஸ் கொடுக்கிறான். இன்னமும் லக்ஷ்மிநாராயணனை அவன் பார்க்கவில்லை. கூட்டத்தில் முண்டியடித்து லக்ஷ்மிநாராயணன் அவன் கையைக் குலுக்குகிறான். கடைசி வரைக்கும் பிரான்ஸிஸ்ராஜ் அவனைத் தெரிந்ததாகவே காட்டிக் கொள்கிறதில்லை.

வெற்றியைத் துரத்தி ஓடுகிற பெரும்பாலான சினிமாக்காரர்கள் அப்படித்தான். உடை நேர்த்தியாய் இருக்கும். செலவுக்குக்காக அடுத்தவன் பாக்கெட்டில் இருக்கிறது. எதிராளியை விடப் பெரியவனைப் பார்க்கிற வரைக்கும் எதிராளியே பெரியவன். முகத்தில் மேல் பூச்சாய் ஒரு புன்னகை. வாயில் இருக்கிறது வார்த்தை. நேரமும், காலமும் அமையும் வரை அங்கே காத்து நிற்குமாம் கொக்கு. பூஜை முடிந்து, ஊதுபத்தி கரைந்து கடைசி கட்டத்துக்கு வந்து கொண்டிருக்கிறது. லக்ஷ்மிநாராயணன் மெல்ல நடந்து பஸ் ஸ்டாண்டில் சில்லறை எண்ணுகிறான். உடனடியாய் எங்கே போகிறது என்றுதான் தெரிகிறதில்லை.

மெயின் ரோட்டில் கடந்து செல்கிற ஆம்புலன்ஸில் சட்டென்று நவகோடி அம்மாள் போல் தெரிகிறது. பக்கத்தில் தெரிந்தது நிச்சயம் மாமியாரின் புடைவை. கடவுளே, யாருக்கு என்ன உடம்பு? சற்று தள்ளி எதிரே ஆஸ்பத்திரியில் ஆம்புலன்ஸ் நுழைகிறது. போக்குவரத்தில் ரோட்டைக் கடந்து லக்ஷ்மி நாராயணன் ஆம்புலன்ஸ் பின்னால் ஓடுகிறான். வாசலுக்கு அவன் வந்து சேர்கிற போது, ஸ்டரெச்சரில் நவகோடி அம்மாளின் கணவரை இறக்குகிறார்கள். வேண்டாத தெய்வங்களை வேண்டியபடி கலங்கிய கண்களில் நவகோடி அம்மாள் பின்தொடர்கிறாள். பின்னால் லக்ஷ்மிநாராயணன் வருகிறதை இருவருமே கவனிப்பதில்லை.

மூடிய அறைக்கு வெளியே நவகோடி அம்மாள் கடவுளுக்கு நன்றி சொல்லுகிறாள். ஆண்டவனே பார்த்துத்தான் ஒரு தைரியத்துக்கு ஆண் துணையாக அவனை அனுப்பித்திருக்கிறான். காலையில் கோவி

ம.வே.சிவகுமார்

லுக்குக் கிளம்பியவள், கட்டிலில் முனகல் சப்தம் கேட்டு நின்று விட்டாள். பக்கத்தில் போய்ப் பார்த்த போது கை கொஞ்சம் அசைந்த மாதிரி தோன்றியது. ஒரு தடவை கண் திறந்து மூடியது போலவும் பட்டது. ஏழு வருடங்களுக்கு மேலாக அசைவேயில்லாத கட்டில். படபடப்பில் எதுவுமே புரியவில்லை. அப்படியே உட்கார்ந்து விட்டாள். இப்போது மீண்டும் கை அசைந்தது. நவகோடி அம்மாள் மூச்சிரைக்க எதிர் வீட்டுக்கு ஓடினாள். விஜயலக்ஷ்மியும், குழந்தையும், மாமனாரும், பள்ளிக்கூடத்துக்குப் போய் விட்டார்கள். ஃபார்மஸியில் போன் செய்து ஆம்புலன்ஸ் வந்தது. யாரும் துணைக்கு இல்லையே என அவள் தவித்துக் கொண்டிருந்த நேரத்துக்கு லக்ஷ்மிநாராயணன் வந்திருக்கிறான்.

''ஆமா, எப்படி இங்க வந்தீங்க?''

நவகோடி அம்மாள் ஆச்சர்யமாய்க் கேட்கிறாள்.

''அதை விடுங்க. தமிழன் கதை, தனி கதை. டாக்டர் என்ன சொல்றாரு?''

மூடிய அறைக்குள்ளிருந்து டாக்டர் வெளிப்படுகிறார். சில பல உபகரணங்களுடன் சிப்பந்திகள் உள்ளே போகிறார்கள். போன வேகத்தில் டாக்டர் அவசரமாய்ப் பின்தொடர்கிறார். சூழ்நிலை பரபரப்பில் மேற்கொண்டு வார்த்தைகள் எழுவதில்லை. மேலும் டாக்டர்கள் உள்ளே போகிறார்கள். வெளியே வரும் போது அனைவரின் முகங்களுமே மகிழ்ச்சியாய் இருக்கிறது. ஏழு வருடங்களுக்கு மேல் கோமாவில் இருக்கிற நோயாளிக்கு நினைவு திரும்புவது என்பது அவ்வளவு பெரிய ஆஸ்பத்திரியிலேயே கூட அன்றாடம் நடக்கிற விஷயமில்லை. மகிழ்ச்சியில் நவகோடி அம்மாள் கழுத்துத் தாலியை ஒற்றிக் கொள்கிறாள். பார்த்துக் கொண்டிருந்த மாமியாரின் கண்களை ஆவந்தக் கண்ணீர் மறைக்



கிறது.

**வி**ல்லிவாக்கம் வீடு. பிரதேசத்தில் செய்தி பரவி, ஏழு வருடங்களுக்கு மேலாக கிட்டத்தட்ட ஒரு பிரேதம் போல் கிடந்த கட்டில் உயிர்த்தெழுந்த அதிசயத்தை வீட்டு வாசலில் கூடிப் பேசுகிறார்கள். அங்கேயே இருந்தவன் என்ற முறையில் தமிழன் முக்கியத்துவம் பெறுகிறான். மனத்தில் உண்மையான மகிழ்ச்சியும், ஆச்சரியமும் கலந்து, எத்தனை முறை திரும்பவும் சொல்வதற்கும் லக்ஷ்மிநாராயணனுக்கு அலுப்பு இல்லை. விஜயலக்ஷ்மிக்கு எல்லாமே ஒரு கனவு மாதிரியிருக்கிறது. நல்லவேளை. நாளை சனிக்கிழமை. பள்ளிக்கூடம் சனி, ஞாயிறு விடுமுறை. குழந்தை போர்வையின் கதகதப்பில் தூங்கிக் கொண்டிருக்கிறான். சீக்கிரமே சமையல் செய்து விஜயலக்ஷ்மி கொடுத்த சாப்பாட்டுக் கேரியரை மாமனார் ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போயிருக்கிறார். இரவு நவகோடி அம்மாளுக்குத் துணையாக மாமியார் ஆஸ்பத்திரியில் தங்குகிறார். எதிர் வீட்டுச் சாவி இங்கே இருக்கிறது. அனைவரும் பேசிக் கலைந்த மௌனத்தில் லக்ஷ்மிநாராயணன் குரல் கரகரக்கிறது.

''விஜயலக்ஷ்மி...''

இருட்டில் முகம் திரும்பியதில் தெரு விளக்கில் மூக்குத்தி பளபளக்கிறது.

''இதே மாதிரி என்னிக்காவது ஆண்டவன் எனக்கும் ஒரு நல்லது செய்ய மாட்டானா?''

''நிச்சயமா.''

''தமிழன் தைரியமா இருக்கலாங்கறே?''

''ஓ!''

''அப்ப உன்னை ஒண்ணு கேக்கட்டுமா?''

''ம்...''

''டிரஸ் கொஞ்சம் வாங்கணும். எல்லாம் பழசாயிடுத்து. அப்புறம் போட்டோ ஆல்பம். எந்தக் கம்பெனிக்கு எடுத்துக் கிட்டுப் போய்க் காட்டினாலும் முதல் கேள்வி எந்த வருஷம் எடுத்ததுன்னு கேக்கறான்.''

''ம்.''

''மேற்கொண்டு நான் சொல்லணுமா? இல்லே உனக்கே புரியறதா?''

''புரியறது.''

''என்ன சொல்றே?''

குரலின் தவிப்பு எப்போதும் போல் இருளிலும் தெரிகிறது. ஆதரவாய் அவன் கையுடன் தன் கையைச் சேர்த்துக் கொண்டு விஜயலக்ஷ்மி சிரித்துக் கொண்டே பதில் சொல்கிறாள்.

''ஜில்பாஸ்.''

லக்ஷ்மிநாராயணன் நெகிழ்ந்து போகிறான். இவ்வளவு அருமையாய் அவனுக்கென்று ஒரு மனைவியைப் படைத்த ஆண்டவன் கைவிட்டு விட மாட்டான். விழவே கூடாது என்பதல்ல; விழுகிற போதெல்லாம் எழுகிற தைரியத்தைக் கொடு என்பதே அவனுடைய பிரார்த்தனை. வாசலில் விளக்கு இல்லாததில் விஜயலக்ஷ்மியின் மடியில், இன்றைக்கு ஆஸ்பத்திரியில் நடந்த மகிழ்ச்சிக் கனோபரங்களையும் மீறி, எத்தனையோ நாள் பழகிய அந்த சினிமாக்காரனின் துரோகம் கீறிய மனது ஆறுதல் பெறுகிறது. அவன் மனத்தை மாற்ற வேண்டி விஜயலக்ஷ்மி ஒரு புதிர் போடுகிறாள். அவள் ஒரு ரகசியம் வைத்திருக்கிறாள். அது என்னவென்று அவன் கண்டுபிடித்துச் சொல்ல வேண்டும்.

''என்ன?''

''சொல்ல மாட்டேன். யோசிச்சுச் சொல்லுங்கோ.''

''நான் இல்லாத போது யாராவது புரொட்யூசர் கார் அனுப்பிச்சாரா?''

''வரும். ஆனா அது இல்லே.''

''மாப்பிள்ளை நல்லவன்னு உங்கப்பா யாருகிட்டேயாவது சொன்னாரா?''

''சீ. அவர் உங்களைக் கெட்டவர்னு

எப்பவுமே சொன்னது கிடையாது.''

''பிளேடு. ராவு நேரத்துலே தமிழனை யோசிக்க வைக்க பேஜார் பண்றியே. என்ன விஷயம் சொல்லு?''

''ம்ஹூம். நீங்க சொல்லுங்கோ.''

''அட யார்ரா இவ? காய்ஞ்ச வயத்துக்குக் கருவாடு காட்டறா. இதோ பார். ரொம்ப டயர்டா இருக்கு. தமிழன் உன் மடியிலே இருக்கும் போது வர்ற யோசனைகளோட ரேஞ்சே தனி. நீயே சொல்லிடறது பெட்டர்.''

''ம்ஹூம்...''

''கிள்ளிடுவேன்.''

''மாட்டேன்.''

''சொல்ல மாட்டே?''

''முடியாது.''

லக்ஷ்மிநாராயணன் நறுக்கென்று நிஜமாகவே கிள்ளி விடுகிறான். வெட்கத்தில் சிவந்து விஜயலக்ஷ்மி தயங்கிச் சொல்லுகிறாள்.

''நீங்க திரும்பவும் அப்பா ஆகப் போறேள்.''

**பீ**ச் ஸ்டேஷன் அலுவலகம். பல முறை டோக்கன் நம்பரைத் தொடர்ந்து ஒலித்தும் யாரும் வரவில்லை. வெளியே வாடிக்கையாளர் பகுதி காலியாய் இருக்கிறது. லக்ஷ்மிநாராயணன் பக்கத்துக் கவுண்டரில் பார்த்துக் கொள்ளச் சொல்லி வெளியே வருகிறான்.

''தம்பி சுரேஷ் பாபு. காப்பி சாப்பிடறியா?''

''என்ன விஷயம் சொல்லு?''

''அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்?''

''அப்ப சரி.''

பேசிக் கொண்டே இருவரும் வெளியே வருகிறார்கள். அவர்களின் உற்சாகத் துள்ளலில் கடுப்புற்றவராகப் புது அக்கவுண்டண்ட் குறுக்கே ஒரு கேள்வியைப் போடுகிறார்.

''மிஸ்டர் லக்ஷ்மிநாராயணன். வேர் ஆர் யூ கோயிங்?''

''அட என்ன சார் போகும் போது கேட்டுக்கிட்டு? ஒரு காப்பி சாப்பிடலாம்னு போறோம்.''

''பிஸினஸ் நேரத்துல கவுண்டரை விட்டுப் போனா என்ன அர்த்தம்?''

''வெளில யாரும் இல்ல சார். பக்கத்துலே பார்த்துக்கச் சொல்லியிருக்கேன். நான் என்ன பாண்டிபஜார் ஜவுளிக் கடை மாதிரி வாசல்ல நின்னுக்கிட்டு ஜனங்களை வா, வான்னா சொல்ல முடியும்?''

அதிரடிப் பேச்சில் வாயடைக்கச் செய்து கபே ஜீம் ஜீம் வருகிறது.

உணர்ச்சியற்ற முகத்தில் சர்வர் ஆர்டர் பெற்றுப் போகிறான்.

''டேய் கோந்தே. நான் அப்பாவாகப் போறேன்டா.''

''அதான் ஆயிட்டியேடா!''

''இது புரொடக்ஷன் நம்பர் டூ. ஏகப்பட்ட செலவு இருக்கு. செக்கப்புக்குப் போகணும். குங்குமப்பூ வாங்கணும். எனக்குக் கொஞ்சம் டிரஸ் வேணும். அப்புறம் புதுசா ஒரு போட்டோ ஆல்பம் பண்ணணும்.''

''உம்.''

''நீ என்ன பண்றே... சாயங்காலம் என் கூட கையெழுத்துப் போட லிங்கிச் செட்டித் தெருவுக்கு வர்றே.''

''ஸாரிடா. இனிமே யாருக்கும் ஜாமீன் கையெழுத்தெல்லாம் போடப் போறதில்லை. பிரெண்ட்ஷிப் கெட்டுடும். என்னை மேற்கொண்டு அமுக்காதே.''

''டேய், டேய் ப்ளீஸ்.''

சுரேஷ் பாபு எதுவும் பேசாமல் எழுந்து கொள்கிறான். கவுண்டரில் பில்லுக்குப் பணம் கொடுத்து அவன் வெளியே கூட்டத்தில் கலக்கிறதை அலங்காரக் கேக்குகள் அடுக்கிய அலமாரியின் வழியாக லக்ஷ்மிநாராயணன் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

(தொடரும்)





# THE INVESTMENT TRUST OF INDIA LIMITED

*An H.C. Kothari Group Company*

"Mashkur Buildings", 1 Krishnama Road, Nungambakkam, Madras 600 034. Tel: 476297, 474871, 474885, 471691

**Free tax consultancy for deposit holders. Please call the F.D. Department on 476297 for an appointment.**

* ITI is not responsible for any liabilities arising out of this tax consultancy service

ICRA RATING
**MAA**–INDICATING
HIGH SAFETY

## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the Administrative Office and other branch offices of the Company.

### DEPOSIT SCHEMES:

| CUMULATIVE DEPOSIT SCHEME Period | Minimum Rs. 1000 and in multiples of Rs. 1000 25 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|
| For Rs. 1000 deposit amount payable on maturity | Rs. 1,384 | Rs. 1,684 | Rs. 1,815 | Rs. 2,107 |
| Effective annual yield | 17.74% | 18.80% | 20.37% | 22.14% |

| FIXED DEPOSIT SCHEME | |
|---|---|
| Period in Months | Rate of interest per annum |
| 25 | 15% Monthly |
| 36 | |
| 48 | |
| 60 | |

| RECURRING DEPOSIT SCHEME | | |
|---|---|---|
| Period in Months | Rate of interest per annum | Maturity value for Rs. 100 |
| 25 | 15% Monthly Compounding | Rs. 2,950 |
| 36 | | Rs. 4,568 |

1. Interest warrants payable at par at all branches of S.B.I.
2. As per RBI Directives for repayment before maturity:
   (a) No interest will be paid upto 12 months (b) Above 12 months, 11% interest will be paid (c) Above 24 months, 1% less than the contract rate will be paid.
3. As per RBI directives, deposits will be repaid before maturity only after 6 months from the date of deposit.

Information required to be specified as per Non-Banking Financial Companies (Reserve Bank) Directions 1977, and Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules 1977, are given below.

(a) Name of the Company: THE INVESTMENT TRUST OF INDIA LIMITED. (b) Date of incorporation: 2nd August, 1946. (c) Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any: Business: Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing etc. The Company has no subsidiaries. Branches: New Delhi, Bombay, Bangalore, Mysore, Hyderabad, Vizag, Nellore, Trivandrum, Cochin, Kottayam, Calicut, Pondicherry, Tirunelveli, Trichy, Coimbatore, Nagercoil, Madurai, Salem, Erode, Thanjavur, Vellore, Dindigul, Tuticorin, Hubli, Rajkot, Surat. (d) Brief particulars of the management of the Company: The Company is managed by the Chairman & Managing Director under the control and supervision of the Board of Directors.

(e) Name, address & occupation of the Directors

Mr. B.H. KOTHARI, Chairman & Managing Director, "Kothari Bagh", 11, Nungambakkam High Road, MADRAS 600 034. Industrialist. Mr. A.L. MUDALIAR, "Avanti", 858 Poonamallee High Road, Kilpauk, MADRAS 600 010. Business Executive & Management Consultant. Mr. G.K. SUNDARAM "Rasakondalu", Circuit House Road, COIMBATORE 641 018. Industrialist. Mr. G. CHIDAMBAR 101-A, Janakpuri, 2nd St., Off: Velachery Road, MADRAS 600 032. Former Managing Director - L I C. Mr. N. SRINIVASAN T-18, Sixth Avenue, Besant Nagar, MADRAS 600 090. Chartered Accountant. Mr. RAM GANAPATI No. 27, "Ashoka Crescent", D.L.F. Kutab Enclave Phase - I, Gurgaon, HARYANA 122 001. Former Chairman of B I F R. Mr. C.R. RAMAKRISHNAN "Meenakshi", No.4, Sir. P.S. Sivasamy Road, Mylapore, MADRAS 600 004. Former Joint Managing Director of Larsen & Toubro Ltd., Mr. M.R. SHAH 23/24, Woodlands Apartments, Peddar Road, BOMBAY 400 026. Business.

| (f) Profits of the Company before and after making provisions for tax for the three financial years immediately preceding the date of advertisement | | | | (g) Dividend declared by the Company in respect of the said year (Rupees in lakhs percentage) | |
|---|---|---|---|---|---|
| | Profit before depreciation and taxation (Rupees in lakhs) | Profit before taxation | Profit after taxation | Amount | Percentage |
| 31.3.92 | 312.81 | 187.44 | 183.19 | 56.10 | 28 |
| 31.3.91 | 255.00 | 150.13 | 150.13 | 36.81 | 25 |
| 31.3.90 | 199.90 | 87.90 | 72.90 | 36.81 | 25 |

| LIABILITIES | 31-3-92 (Rupees in lakhs) | 31-3-1991 | ASSETS | 31-3-92 (Rupees in lakhs) | 31-3-91 |
|---|---|---|---|---|---|
| Share Capital | 217.10 | 147.25 | Fixed Assets | 1571.25 | 1175.73 |
| Reserves & Surplus | 877.50 | 444.05 | Investments | 123.88 | 68.41 |
| Secured Loans | 1674.11 | 1663.15 | Current Assets | | |
| Unsecured Loans | 2332.05 | 1816.28 | Loans and Advances | 4793.06 | 4182.87 |
| Current Liabilities | 1496.99 | 1262.84 | Miscellaneous | | |
| Provisions | 105.68 | 103.39 | Expenditure | 15.24 | 9.95 |
| | 6503.43 | 5436.96 | | 6503.43 | 5436.96 |

Note: Contingent Liability not provided for: (i) On partly paid Shares and Debentures: Rs. 49,475 (ii) Sales tax on lease contracts under writ petitions: Rs. 20,34,009 (iii) Commitments in respect of contracts to be executed on capital account (since discharged): Rs. 8,12,000 (i) The amount which the Company can raise by way of deposits under Reserve Bank of India directions: Rs. 87.93 Crores. Aggregate of deposits actually held on the last day of the immediately preceding financial year, viz. 31.3.1992: Rs. 20.40 crores. (j) The Company has no overdue deposits other than unclaimed deposits. (k) It is hereby declared that (i) The Company has complied with the applicable provisions of the directions. (ii) The compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India and (iii) The deposits accepted by the Company are unsecured and rank pari passu with other unsecured liabilities.

The above text of this advertisement has been approved by the Board of Directors on 29.5.92.

(By Order of the Board)
For THE INVESTMENT TRUST OF INDIA LIMITED

V. Parthasarathy Secretary

Regd. Office:
"Kothari Buildings"
117, Nungambakkam High Road,
Madras 600 034

Note: A copy of this text duly signed by a majority of the Directors of the Company has been filed with Reserve Bank of India, Bangalore.

**Deposits can be made at all our branches**

"டேய்... தண்ணிக் காரு வருது..."

"எப்போ வர்றானுவ பாரு!"

"இங்க என்ன சாம்பலை அணைக்க வர்றானுவளா... வரட்டும் வரட்டும்!"

அந்த கிராமத்து மக்கள் தலைக்குத் தலை கூச்சலிட, தூரத்தில் சங்கு ஒலித்தபடி சிவப்பு நிற தீயணைப்பு வண்டி வேகமாக வந்து கொண்டிருந்தது. பாவம் பெரிய வாத்தியார்! வீடு பெரும்பகுதி எரிந்திருந்தது. கூரைக் கட்டு வீடு. போன மாத குறுவை அறுவடையில்தான், புதுக்கீற்றுப் போட்டிருந்தார். போதாதற்கு மேலே, வைக்கோல் போட்டுப் பரப்பி இருந்தார். வாத்தியாரின் மனைவி அடுக்களை சாம்பலைச் சரியாக அணைக்காமல், கொல்லைப்புறக் குப்பைக் குழியில் கொட்ட, பக்கத்து வைக்கோல் போரில் எளிதாய்த் தீப்பற்றியது. தாழ்வான கூரை மீது நெருப்பு தாவ, இரவாணம் தொடங்கி உச்சி வரை நெருப்பு மயம்தான். நெருங்க முடியாத அளவுக்கு வெக்கை அடித்தது. வானம் நோக்கிப் பொதி பொதியாய்ப் புகை மண்டலம் போய்க் கொண்டிருந்தது.

எஞ்சிய கூரையில் சில பகுதிகளில் தீ ஜ்வாலைகள் எரிந்து கொண்டிருந்தன. வெக்கையையும் பொருட்படுத்தாமல், அக்கம்பக்கம் இருந்த தென்னை மர பச்சை மட்டைகளை அவசரமாய் வெட்டி நெருப்பின் மீது அடித்து அணைத்தார்கள். அடி பம்பு, கொல்லைப்புற வாய்க்கால் நீர் என ஆலாய்ப் பறந்து, தீயணைக்கப் படாத பாடு பட்டது தெரிந்தது. வீட்டின் ஆளோடியில் அவசரமாய்ப் பிய்த்தெறிந்த கீற்றுகளும், எரிந்த கரித்துகள்களும் பரவிக் கிடந்தன. தெருவில் கரித்துகள் படிந்த நீர் ஓடிக் கொண்டிருந்தது.

வாத்தியாரின் மனைவியும், அவரது பெரிய பெண்ணும் வாயிலும் வயிற்றிலும் அடித்தபடி நின்றனர். வாத்தியார் வாயில் துண்டை வைத்தபடி, எரியும் கூரையை வெறித்துப் பார்த்தபடி செய்வதறியாது நின்றார்.

தூரத்தில் வந்த தீயணைப்பு வண்டி விரைவாய் வந்து நின்றது. ஸ்டேஷன் ஃபயர் ஆபீஸர் கோபாலன், லீடிங் ஃபயர் மேன் ராஜாராமன் இருவரும் விருட்டென்று வண்டியிலிருந்து குதித்தார்கள். எரியும் கூரையை நோட்டமிட்டு விட்டு கோபாலன் அனிச்சையாய் எல். எஃப் ராஜாராமனுக்கு கட்டளைகள் பிறப்பிக்க, மற்ற ஃபயர் மேன்கள் தம் பூட்ஸ்களை சப்திக்க துரித கதியில் இயங்கினார்கள்.

வண்டியில் 'டி' என எழுதப்பட்டிருந்த பக்கத்தின் டெலிவரி அறைகள் விரைவாய்த் திறக்கப்பட்டன. சுற்றப்பட்டிருந்த ஹோஸ் பைப்புகள் விரிக்கப்பட்டன. எல். எஃப் ராஜாராமன் நீரைப் பீய்ச்சியடிக்க, அதன் வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல், எஞ்சியிருந்த நெருப்பு ஜுவாலைகள் மூர்ச்சித்து அடங்கின.

பாதுகாப்புக் கருதிப் பக்கத்துக் கூரைகளையும் தீ பரவாமல் ஈரப்படுத்தினார்கள்.

காரியம் முடியட்டும் என்று இருந்தது மாதிரி, காத்திருந்த கூட்டம் ஏதோ தங்களுக்குள் முணுமுணுத்துக் கொண்டது.

"இவனுக்கெல்லாம் கவருமெண்ட் தெண்ட சம்பளம் தான் குடுத்து வச்சிருக்கு..."

"வர்றதுதான் வந்தானுங்களே... சித்த முந்தித்தான் வந்தாலென்ன? குறைஞ்சா போய்டும்..."

"பாரேன்... ஒவ்வொருத்தன் போலீஸ் மாதிரி கடாமீசை வச்சிக்கிட்டு... வந்து என்ன பிரயோஜனம்!"

"டேய் சம்முவம்! அவனுங்களை ஏதாவது ஒரு வழி பண்ணி அனுப்பணும் வா..."

அந்தக் கூட்டத்தில் ஃபயர் சர்வீஸ்காரர்களைத் திட்டாதவர்கள் யாருமே இல்லை என்று சொல்லலாம். அவரவர் வாய்க்கு வந்தபடி திட்டியதை, ஃபயர்மேன்கள் பொருட்படுத்தாமல் தங்கள் வேலையில் மும்முரமாய் இருந்தார்கள்.

ஒருவழியாய்த் தீயை அணைத்து முடித்தாயிற்று. எல். எஃப் ராஜாராமன் பொறு



# தீ அணைப்பு

திருவாரூர் வி. மருதவாணன்



மையாய் வண்டிக்குப் பின்புறம் சென்றார். பிடி ஒன்றை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார். வண்டியையும், தன்னைச் சார்ந்தவர்களையும் அடிப்பது மாதிரி, வெறித்துப் பார்த்த கூட்டத்தை ஒருகணம் பார்த்தார். யோசித்தார். 'ஏதோ விபரீதம் நடப்பதற்கான அறிகுறி' அறிந்தார்.

''டேய் சம்முவம்... என்னடா வேடிக்கை பாக்குற... பின்பக்க டயர்ல காத்தைப் புடுங்கி விடுடா...''

கூட்டத்தில் யாரோ சம்முவத்தைக் குத்தி விட்டார்கள்.

ராஜாராமனுக்குப் பொறுக்க முடியவில்லை. இனி மௌனமாய் இருப்பது ஆபத்தில் முடியும் என அவருக்குப் பட்டது.

''என்னய்யா... என்ன பிரச்னைன்னு சொல்லுங்க... அதவுட்டுட்டு ஆளுக்கு ஆளு பேசினீங்கன்னா, என்ன நியாயம்...?''

''என்னய்யா... நியாயம் வேண்டிக் கிடக்கு... ஒரு வூடு முழுகம் எரிஞ்சு போச்சு... எரிஞ்சு பொறவு வந்திருக் கிரே...''

- பெரிய வாத்தியாரே கோபப்பட்டது ராஜாராமனுக்கு என்னவோ போலிருந்தது.

''என்ன வாத்தியாரைய்யா!.. நாலு புள்ளைக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கற நீங்களா இப்படிப் பேசு றது...? ஃபயர் சர்வீஸ்காரன் லேட்டா வந்ததுனாலே எல் லாம் எரிஞ்சு போச்சுன்னு எங்க மேல பழியப் போடு றீங்க... அது சரி... எங்களுக்கு எத்தனை மணிக்கு போன் பண்ணாங்க...?''

''யாருப்பா பெரிய பண்ணை வூட்டுல போன் பண்ணு னது?'' வாத்தியார் கேட்டார்.

''அது தேவையில்ல வாத்தியாரைய்யா..... ஏன்

லேட்டா வந்தீங்கன்னு கேளுங்க... கிரா மத்து ஜனங்கன்னு மழுப்பப் பார்ப்பா னுவோ!''

''யாருய்யா அது! நாங்க ஒண்ணும் மழுப்பல... மொதல்ல அட்ரஸ் சரியா கொடுத்தாங்களான்னு கேளுங்க, மடப்புரத் துல தீப்புடிச்சிட்டுதுன்னு சொல்லிட்டு உடனே போனை வச்சிட்டாங்க...

''நாங்க எந்த மடப்புரத்தை நினைக் கிறது...? அது மட்டுமா, பேசினா போன் நம்பர் என்ன? அட்ரஸ் என்ன? வர்றதுக்குச் சரியான வழி என்ன? இதெல்லாம் சொன்னாத்தானே காலத்துக்கு வர முடி யும்... வெறும் மொட்டையா மடப் புரம்னா?''

ராஜாராமனின் பேச்சில் கூட்டம் கொஞ்சம் தவறை யோசிப்பது போலிருக்க, திடீரென்று வண்டியின் முன் கண்ணாடியில் பொட்டென்று ஒரு கல் விழுந்தது. நட்சத் திரமாக விரிசல்... சம்முவம் கைவரிசை காட்டி விட்டு மறைந்திருந்தான்.

ராஜாராமனுக்கு யாரோ முகத்தில் அறைந்தது மாதிரி இருந்தது. மற்ற ஃபயர் மேன்கள் உணர்ச்சிவசப்பட, கண்களா லேயே அவர்களை அடக்கினார்.

ஒவ்வொரு ஃபயர் கால்லேயும் இது சகஜம்தான் என்றாலும் இன்று நிலைமை சரியில்லை என்பதை உணர்ந்திருந்தார் ராஜாராமன்.

கிராமத்து மக்கள் கோபம் ஓரளவு தணிந்திருந்ததை... சம்முவம் செய்கை, கொஞ்சம் மூட்டி விட்டுப் போயிருந்தது. இப்போது கிளம்பி விடுவது எல்லாவற் றுக்கும் நல்லது என்று ராஜாராமன் வண்டியை எடுக்கச் சொன்னார்.

தீயணைப்பு வண்டி புறப்பட்டது. ராஜா ராமன் டிரைவர் சீட்டு அருகே அமர்ந் திருந்தார். கண்ணெதிரே முகப்புக் கண் ணாடியில் வன்முறை கோடு கிழித்திருந் திருந்தது. மனசுக்குச் சங்கடமாய் இருந்தது. வண்டி பற்றிய வன்முறையில் தேசத்தின் போக்கு தெரிந்தது.

அந்தத் தீயணைப்பு வண்டி, விரை வாய் நிலையத்திற்குத் திரும்பிக் கொண்டிருந்தது. சரியான முகவரியில் லாது ஏதேனும் 'ஃபயர் கால்'கள் அவர் களுக்கு வரலாம்.

---

# புதிய அடிமைகள்!

நாற்பத்தேழுக்குப் பிறகு இங்கே
பட்டா மாற்றப்பட்ட
புதிய அடிமைகள்,
புதிய பரிவட்டங்கள்!

இளைத்தவரின் கரங்களிலே
இலவசங்களால் திருவோடு!



இவர்களின் வாக்குப் பிச்சை தரும்
ஏ. சி. சுகம் புதிய எஜமானர்களுக்கு!
லட்சங்கள் இவர்களுக்கு
லட்சியமேயில்லை,
கோடிகளே குறிக்கோள்!

சிக்கன உபதேசம் செய்துவிட்டுச்
சுளுக்கெடுக்கச் சீமைக்குப் பறக்கும்
இச்சீமான்கள்
எல்லாம் தொலைத்து நிற்கும்
இந்நாட்டுத் தரித்திரருக்குத்
தலைக்குமேல் பறக்கின்ற
தனி விமானத்திலிருந்து
தருகின்ற அறிவுரை,
'தியாக புத்தி!' ஆமாம்!
நாற்பத்தேழுக்குப் பிறகு இங்கே
பட்டா மாற்றப்பட்ட
புதிய அடிமைகள்!

- சத்யகிரி ராஜன்

**ரொ**ம்ப சாதுவான ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் வெயிட்டர். அவன் மேல் திருட்டுப் பழி சுமத்தி ஒரு வருஷம் கம்பி எண்ண வைத்து விடுகிறார் ஓர் எம்.எல்.ஏ. (அதற்கான காரணத்தைக் கேட்க வேண்டுமே! காக்கா-நரி-வடை கதையிலுள்ள சுவாரஸ்யம் கூட நஹி.) அத்தனை சாதுவான வெயிட்டர், ஜெயிலுக்குப் போய் புதிய பாதை பார்த்திபன் மாதிரி வெளியே வருகிறார். அப்புறமென்ன? தன்னைப் பழிவாங்கின சமூகத்தைத் தானும் பழிவாங்க வேண்டாமா? சும்மா சொல்லக் கூடாது இரண்டரை மணி நேரம் சூப்பர் பழிவாங்கல்.



கதை, திரைக்கதை, டைரக்ஷன், நடிப்பு, தயாரிப்பு - சர்வமும் பிரேம்! ஃபிரேமுக்கு ஃபிரேம் - பிரேம். ஆனால் அவர் தம் மேக்கப்பில் செலுத்தியிருக்கிற கவனத்தில் பத்து சதமாவது ஸ்கிரிப்டில் செலுத்தியிருந்தால் கூடப் போதுமானதாயிருந்திருக்கும். அதென்ன சார், ஃபிலிம் சுருளை பரோட்டா மாவில் தயாரித்திருக்கிறார்களோ என்னவோ - பயங்கர ஜவ்.

ஹீரோயின் ரோகிணி. மறுபடியுமிற்குப் பிறகு மறுபடியும் தம்மை நிரூபித்துக் கொண்டிருக்கிறார். சரியான வாய்ப்புகள் மட்டும் கிடைக்குமானால், அர்ச்சனா, சுஹாசினி, ரேவதி லிஸ்டில் கூடிய சீக்கிரம் இடம்பிடித்து விடுவார்.

# புதுப் பிறவி

அலட்டலே இல்லாத நடிப்புக்கு நெப்போலியன். நூறு சதம் அரசியல்வாதியாகப் படம் நெடுக அவர் பண்ணுகிற அமர்க்கள ஆர்ப்பாட்டங்கள் பாலைவனச் சோலை.

மேலும் குறிப்பிட வேண்டியது சண்டைக் காட்சிகள். அவை தேவையற்றிருப்பினும் - அமைப்பின் விறுவிறுப்பில் தேவையின்மை மறக்கிறது.

தேன் இல்லை, தென்றல் இல்லை, இசை இருக்கிறது; தேவா!

தமிழ் ஃபீல்டில் தம்மை நிலைநிறுத்திக் கொள்வதன் பொருட்டு, ஏராளமாகச் செலவு பண்ணி பிரேம் இந்தப் படம் எடுத்திருக்கிறார். செலவோடு செலவாகச் சூட்டுக்குத் தடவ ஒரு பர்னாலையும் வாங்கியிருக்கலாம்!

# தசரதன்

ஒரு பி.டி.ஸி. டிக்கெட்டின் பின்னால் எழுதி விடக் கூடிய கதை.

''சுதந்திரப் போராட்டத்துல கொடி பிடிச்சிட்டுப் போனதுக்காக, போலீஸ்காரங்க எங்கப்பாவை அடிச்சே கொன்னாங்க. அதனால போலீஸ் உத்தியோகம் வேணாம்'' - இது சிவகுமார்.

''ஒட்டுமொத்தமா எல்லாப் போலீஸ்காரனும் கெட்டவன் இல்லை. போலீஸ் துறை ரொம்பப் புனிதமானதாக்கும்'' - இது சரத்குமார்.

ரொம்ப நாளைக்கப்புறம் போலீஸுக்கு வக்காலத்து வாங்குகிற ஒரு படம். உதவி கமிஷனராக, சிறுமை கண்டு பொங்குபவராக சரத்குமார். காக்கி டிரெஸ்ஸில் கச்சிதம்.

ஒரு சந்தேகம். படத்தில், கிராமத்து சரத்குமார் ஐபிஎஸ் பாஸ் பண்ணியிருப்பதாகத் தகவல் ஏதும் இல்லை. என்னமோ இன்டர்வியூ என்று மெட்ராஸ் வருகிறார். அடுத்த ஷாட்டில் அஸிஸ்டெண்ட் கமிஷனர்!

ஏற்கெனவே நடிகராக அறிமுகமாகிவிட்ட கிட்டி, இதில் டைரக்டராகப் புதுமுகம் காட்டியிருக்கிறார். அவருக்கு எக்கச்சக்க சந்தேகம், குழப்பம்.

இது தன் படமா? சரத்குமார் படமா?

கதை - சென்ட்டிமெண்ட் சமாசாரம். சரத்குமாருக்காக எத்தனை சதவீதம் ஆக்ஷன் சேர்ப்பது?

ஹீரோ, சரத்குமாரா? சிவகுமாரா?

- இந்த ரீதியில் டைரக்டரின் குழப்பத்தைப் பட்டியல் எடுத்தால் அதற்கு ஓர் இலவச இணைப்பு தேவைப்படலாம். நமக்கோ இது ஆக்ஷன் பிலிமா, ஆர்ட் பிலிமா என்று குழப்பம். கூட்ஸ் வேகத் திரைக்கதை; சமயத்தில் தடம் புரண்ட கூட்ஸ்!

சரத்தைத் துரத்திக் காதலிக்கும் ஹீரா. ஆஹா, ரொம்ப ஜோரா! அந்த சிரிப்பு இருக்கே, ஜீரா!

சரண்யா ஏறக்குறைய இன்டர்வலில் வருகிறார். மகனின் பாவத்திற்குப் பிராயச்சித்தம் தேடி, சிவகுமார் அவருக்குக் கூடமாட ஒத்தாசை செய்கிறார். சென்ட்டிமெண்ட் வாசனை தூக்கலாகத் தெரியும் சிலபல சீன்கள். ரெண்டு பேரும் வெளுத்து வாங்குகிறார்கள்.

அப்புறம் இசை - எல். வைத்தியநாதன். ரீ-ரெக்கார்டிங்கில் இரைச்சல்! பாடல் காட்சிகளில், நாலு சீட்டுக்கு ஒரு ஆளாக, தாராளமாக உட்கார்ந்து ரசிக்கலாம்.

படம் முழுக்க கடுகு தாளித்தாற்போல ஆங்காங்கே மணிரத்ன வாசனை.

கொஞ்சம் தேய்ந்த கடுகு!

- ஆர்.பி.ஆர்.



# பாண்டியன் மகள்

## 7. பாண்டியன் மகள்

தென்றல் புறப்படும் இடமாகக் கவிகள் பாடிய பொதிகை, அடர்ந்த காடுகளும், அருவிகளும் நிறைந்து கவிகளின் வாக்கை மெய்ப்பித்துக் கொண்டிருந்தது. மூலிகைகள் நிறைந்து கிடந்ததால் காற்றிலே ஒருவித மணம் பரவி, புத்துணர்ச்சி ஊட்டிக் கொண்டிருந்தது. கூடவே கேட்ட மிருகங்களின் உறுமல்கள் ஆக்கமும் அழிவும் இணைபிரியாதவை என்ற உண்மையை அரையனுக்கு உணர்த்தின. அவன் மெல்லத் தனது புரவியை நடத்தினான். தூரத்தில் கேட்டுக் கொண்டிருந்த அருவியின் ஓசையை வைத்துத் தான் செல்ல வேண்டிய திசையை நிர்ணயித்தபடி சென்று கொண்டிருந்தான்.

கவி கூறிய அடையாளங்களை நினைவில் கொண்டு மேலும் சற்று தொலைவு சென்றதும் பாறைகளின் உச்சியில் ஒரு புகை மண்டலம் போல் தெரிவதைக் கண்டு, அது புகையல்ல அருவியின் முதல் வீழ்ச்சி என்று புரிந்து கொண்டான். அருவியின் மேற்புறத்துப் பாதையில் பாறைகளின் மீது இரண்டொரு தலைகள் தோன்றி மறைந்ததையும் கூடவே வெயிலில் பளிச்சிட்டு மறைந்த வேல்களையும் கவனித்து விட்டாலும் நிதானமாகவே தன் புரவியை நடத்தினான்.

எதிர்பார்த்தபடியே சற்று நேரத்தில் பாறைகளின் மறைவிலிருந்து திடீரென்று வெளிப்பட்ட வீரர்கள் கைகளில் ஈட்டிகளுடன் அரையனைச் சூழ்ந்து கொண்டனர். அவர்களைப் பார்த்தவுடன் சேர வீரர்கள் என்பது புரிந்தது. அவர்களின் தலைவனாகத் தோன்றியவனுக்கு இத்தனை வீரர்கள் திடீரெனச் சூழ்ந்தபின்னும் ஏதும் நடவாதது போல் புரவியில் அமர்ந்திருந்த அந்த வாலிபனின் நிதானமும், முகபாவமும் வியப்பை அளித்திருக்க வேண்டும். ''டேய் யார் நீ?'' என்று முரட்டுத்தனமாக வினவினான்.

அரையனின் பதில் நிதானமாக வந்தது. ''நான் யார் என்பது அத்தனை முக்கியமல்ல.''

''பின் எது முக்கியம்?''

''கோட்டைத் தலைவர் இறந்து விட்டதால் பொறுப்பேற்றிருக்கும் புதிய உபதலைவருக்கு முக்கிய செய்தியொன்று கொண்டு வந்திருக்கிறேன் என்பதுதான் முக்கியம்'' என்றான் அரையன்.

அரையனது பதிலைக் கேட்ட வீரர் தலைவன் பிரமித்து நின்றான்.

கோட்டைத் தலைவன் இறந்ததையும் தான் பொறுப்பேற்றுக் கொண்டதையும் தலைநகருக்குக் கூட உடனே அறிவிக்க வேண்டாம் என்று உபதலைவன் தங்களுக்கு உத்தரவிட்டிருக்க, புதிதாக வந்த அந்த வாலிபன் சர்வசாதாரணமாக அதைப் பற்றிப் பேசுவதைக் கேட்ட வீரர் தலைவனுக்கு இவன் சாமானியமானவனல்ல என்ற எண்ணமும், ஒரு வேளை உபதலைவருக்கு நெருங்கியவனாயிருக்கக் கூடுமோ என்ற





சந்தேகமும் எழுந்ததால் சற்று மரியாதை யுடனேயே அடுத்த கேள்வியைத் தொடுத் தான் : ''நீங்கள் தலைவருக்கு வேண்டிய வரா?''

அவன் மனத்திலோடிய எண்ணங் களைப் புரிந்து கொண்ட அரையன் அவன் குரலிலும் பேசிய முறையிலும் தொனித்த மாறுதல்களைக் கவனித்தாலும் கவனியா தவன் போல, ''நான் கோட்டைத் தலை வரைச் சந்திக்க வேண்டும். அவருக்கு முக்கியமான ஓலையொன்று கொண்டு வந்திருக்கிறேன். நீங்களாவது அழைத்துச் செல்லுங்கள், அல்லது வழியையாவது விடுங்கள்'' என்றான்.

வீரர் தலைவனின் குழப்பம் குரலிலும் தெரிந்தது : ''வீரனே, தலைவர் இப்போது கோட்டையில் இல்லை.''

**விஷ்வக்சேனன்**

அரையன் பதில் சட்டென்று வந்தது : “அவர் கொட்டுந்தளத்திற்குத்தான் சென்றிருப்பார். அவர் உத்தரவின்படி என்னை அவர் வரும் வரை காவலில் வைக்கலாம்!”

வீரர் தலைவனது பிரமிப்பு உச்சிக்குச் சென்றது. புதிதாக வரும் எவரையும் தான் வரும் வரை காவலில் வைக்குமாறு உபதலைவன் உத்தரவிட்டதை அந்த வாலிபன் அறிந்திருந்ததுடன் அதற்கு 'தானே வலிய ஒப்புக் கொண்டதையும் கண்டவன்' இவன் நிச்சயம் உபதலைவருக்கு வேண்டியவன் தான்” என்று தீர்மானித்தான். அரையன் கழற்றிக் கொடுத்த வாளையும் வாங்க மறுத்து, கோட்டையை நோக்கிச் செல்ல அனுமதித்தான். மற்ற வீரர்களுக்கு உடன் செல்ல உத்தரவிட்டான்.

கானகத்தில் தன்னிடமும் ஜெயந்தனிடமும் சிக்கிய சேரநாட்டு வீரனை அச்சுறுத்தி அவனிடமிருந்து விவரங்களை முழுதுமாகத் தெரிந்து கொண்டிருந்த அரையன், சுலபமாக வீரர் தலைவன் தன்னை நம்பத் தொடங்கி விட்டதையும், தன் வாளைக் கூட அகற்ற ஒப்பாததையும் கண்டு தனக்குள் நகைத்தபடி அவனைப் பின்தொடர்ந்தான்.

நட்ட நடுவில் அரையன் புரவி மீது அமர்ந்து வர, வீரர்கள் சூழ்ந்து வர, அந்தச் சிறு ஊர்வலம் கோட்டையை நோக்கி நகர்ந்தது. போகப் போக பாதை விசாலப்பட்டதைக் கண்ட அரையன் வேறு இரண்டு பாதைகள் வந்து கலந்ததையும் கவனித்து, அவற்றில் ஒன்று கொட்டுந்தளத்திற்கும், சரிவில் இறங்கி மேற்கு நோக்கிச் சென்ற பாதை காந்தளூர்ச் சாலைக்கும் செல்கின்றன என்று அனுமானித்தான்.

சற்று தொலைவில் மரக் கூட்டங்களினூடே தெரிந்த கோட்டையையும் பின்புறம் எழுந்து நின்ற பாறைகளையும் கவனித்த அரையன் அந்தக் கோட்டைக்கு இயற்கை அளித்திருந்த பாதுகாப்பே அதிகம் என்பதையும், கோட்டையின் மதில்கள் அத்தனை பலமாக இல்லை என்பதையும் கண்டான். கோட்டையை நெருங்க நெருங்க அந்த மதில்களில் தெரிந்த பிளவுகளையும் அதில் முளைத்திருந்த செடிகளையும் பார்த்து அந்தக் கோட்டையை அத்தனை பலவீனமாக ஏன் வைத்திருக்கிறான் சேரன் என்றும் தனக்குள் கேட்டுக் கொண்டான். சரிவரப் பராமரிக்கப்படாததால் கரகரவென்ற பெரும் சப்தத்துடன் திறந்த கதவுகளின் வழியே உள்ளே நுழைந்ததும் அவன் கேள்விக்கான விடை கண்ணெதிரில் தெரிந்தது. கோட்டையின் உள்ளே பெரும் பகுதி ஆயுதங்கள் செய்யும் பட்டறைகளாக இருப்பதையும், வீரர்களை விடப் பணிபுரிந்து கொண்டிருப்பவர்களின் எண்ணிக்கையே அதிகமாயிருப்பதையும் கவனித்தவன், ஆயுதங்களை ஏற்றிச் செல்ல வண்டிகள் வரிசையாக நின்றிருப்பதையும் கண்டு, கொட்டுந்தளத்திற்கும் காந்தளூர்ச் சாலைக்கும் இங்கிருந்துதான் ஆயுதங்கள் செல்கின்றன என்று புரிந்து கொண்டான்.

நேர் எதிரில் தெரிந்த மாளிகை, தலைவனின் இருப்பிடமாக இருக்க வேண்டும் என்று யூகித்தவன், தான் பக்கவாட்டில் மதிற் சுவரின் ஓரமாக அழைத்துச் செல்லப்பட்டதால் சிறைச்சாலை பின்புறத்தில்தான் இருக்க வேண்டும் என்றும் புரிந்து கொண்டான்.

பின்புற மதிற்சுவரை ஒட்டிய சிறையொன்றில் அரையனை அடைத்த வீரர் தலைவன், கோட்டையின் உபதலைவர் வந்தபின் மீண்டும் சந்திப்பதாகக் கூறிச் சென்றான். அரையன் சிறைக்குள் நுழையு முன் அவன் வாளைப் பெற்றுக் கொண்டான் தலைவன். சிறைக்குள் தனித்து விடப்பட்ட அரையன் அந்தச் சிறையின் அமைப்பை ஆராய்ந்தான்.

அறை விசாலமாயிருந்தது. ஓரத்தில் ஒரு படுக்கையுமிருந்தது. உயரே அமைந்திருந்த ஒரே ஒரு சாளரமும் அதன்பின் தெரிந்த நீலவானமும் சாளரத்தின் வழியே வெளியேறுபவன் அதல பாதாளத்தில்தான்

### அருள்வாக்கு

“என் கடன் பணி செய்து கிடப்பதே” என நமக்கெல்லாம் வழிகாட்டினார் அப்பர் ஸ்வாமிகள். அவர் என்ன செய்தார்? “பாடும் பணி”யினால் ஸகல ஜனங்களின் நெஞ்சமும் உருகிப் பரமேச்வரனிடம் சேருமாறு பண்ணிவைத்தது அவர் செய்த வாக் கைங்கர்யம். அது தவிர சரீர கைங்கர்யமாக, ஒரு உழவாரப் படையை வைத்துக் கொண்டு கோயில் கோயிலாகப் போய் அங்கே ப்ராகாரத்தில் முளைத்திருந்த புல்லைச் செதுக்கிக் கொண்டிருந்தார். உலகத்திலுள்ள ஜீவர்களுக்குச் செய்கிற தொண்டிலேயே உலக ஜீவர் எல்லோருக்கும் அம்மையப்பனான பரம்பொருளுக்குச் செய்கிற தொண்டையும் சேர்த்து, ஜனங்களின் உள்நெறிக்கு உபகாரம் பண்ணியதே அப்பரின் பெருமை.

அப்பர் காட்டிக் கொடுத்தபடி அம்மையப்பரிடம் பக்தி வைத்து, எல்லோரும் அந்த ஒருவனின் குழந்தைகள் என்கிற அன்பில் ஒன்றுபட்டுச் சேர்ந்து ஸேவை செய்கிறபோதுதான் த்வேஷம்,



கட்சிச் சண்டை, ஏமாற்று, வெறும் நடிப்பான 'இன்டக்ரேஷன்' (ஒருமைப்பாடு) இவை இன்றி, களங்கமில்லாத பரிசுத்த ஒற்றுமையும், உத்ஸாஹத்தோடு உழைக்கிற மனப்பான்மையும் ஏற்படும். பெரிய பெரிய கார்யங்களையும் ஸுலபமாக ஸாதிக்கலாம். அந்தச் சூழ்நிலையிலேயே ஆனந்தத்தின் ஸுகந்தத் தென்றல் வீசும். கெட்டதுகளின் வாடையே அங்கு தலை காட்டாது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்.

இறங்க வேண்டும் என்பதை உணர்த்தின. அறையின் ஒரு மூலையில் நீர் நிரம்பிய பானையொன்றும் குவளையும் காணப்பட்டன.

சற்று நேரத்தில் சிறைக்கு வெளியே நடந்த வாக்குவாதம் அவன் கவனத்தை ஈர்த்தது.

காவலுக்கு நின்றிருந்தவனிடம் மற்றொரு வீரன் கடுமையாகப் பேசிக் கொண்டிருந்தான்.

''சிறையிருப்பவரை யாரென்று பார்த்து விட்டுப் போகிறேன்.''

''அதையெல்லாம் அனுமதிக்க முடியாது. உள்ளே இருப்பவரிடம் உபதலைவர் வரும் வரை யாரும் அணுகவோ பேசவோ கூடாது.''

இருவர் பக்கலிலும் வேறு பல வீரர்கள் சேர்ந்து கொள்ளவே வாக்குவாதம் பலப்பட்டது.

அவர்கள் வாக்குவாதத்தைக் கவனித்த அரையனுக்கு ஒன்று தெளிவாகியது. கோட்டைக்குள் இரு பிரிவுகளிருக்கின்றன; இறந்து விட்ட கோட்டைத் தலைவருக்கு விசுவாசமாக இருந்த வீரர்கள் உபதலைவன் பொறுப்பேற்றதை அதிகம் விரும்பவில்லையென்பதும் அந்தப் பதவிக்கு ஏற்கெனவே வேறு ஒருவர் இருப்பதையும் அவர்கள் பேச்சிலிருந்து புரிந்து கொண்டான் அரையன்.

வெளியில் நடந்த வாக்குவாதம் முற்றியதால் கைகலப்பு ஏற்படும் நிலையில், அவசரமாக வந்தான் ஒரு முதிய வீரன். அவனைக் கண்டதும் வீரர்கள் மத்தியில் சற்று அமைதி ஏற்பட்டது.

வாயிற் காவலனிடம் ஏதோ கூறியவன் கதவைத் திறந்து அரையனை நெருங்கினான். அரையன் நின்ற தோரணையும் அலட்சியமான முகபாவமும் அவனுக்கு ஏதோ சந்தேகத்தை உருவாக்க, ''தம்பி நீ காஞ்சியிலிருந்து வருகிறாயா?'' என்று கேட்டான். அவன் குரலும் மிகவும் தாழ்ந்து ஒலித்தது.

ஆமென்பதற்கறிகுறியாகத் தலையசைத்த அரையன், அடுத்து அவன் கேட்ட கேள்வியால் வியப்படைந்தான்.

ஒருமுறை திரும்பி வாயிலை நோக்கிய அந்த முதியவன், ''கவி அனுப்பி வைத்தாரா உன்னை?'' என்றான்.

வியப்புடன் ஏதோ கேட்க வாயெடுத்த அரையன் மேலும் இரு காவலர் அறைக்குள் நுழைவதைக் கண்டு வாயை மூடிக் கொண்டான்.

அந்த முதியவனும் புரிந்து கொண்டிருக்க வேண்டும். உள்ளே நுழைந்த வீரர்களிடம், ''வாருங்கள் இவனைக் கோட்டைத் தலைவரிடம் அழைத்துச் செல்வோம்'' என்றான்.

சிறையை விட்டு வெளியே வந்த அரையன் வீரர்களுடன் கோட்டையின் பல கட்டுக்களைத் தாண்டி, அரண்மனை போலிருந்த அந்த மாளிகையில் நுழைந்தான். நடந்து வந்து கொண்டிருந்த போது அவன் புத்தி துரிதமாக வேலை செய்தது. பல ஆண்டுகளாக மறைந்து கிடந்த மர்மம் கவிநாராயண பட்டருக்குத் தெரிந்த விதம் அப்போதுதான் அவனுக்குப் புரிந்தது. கோட்டைத் தலைவன் உயிருடன் இருக்கும் வரையில் அந்த முதியவனும் ரகசியத்தைக் காப்பாற்றியிருக்க வேண்டும். அவன் இறந்தபின் உபதலைவன் கோட்டைத் தலைவனாவதை இம் முதியவன் விரும்பாததாலும் இன்னும் வேறு ஏதோ காரணத்தினாலும் கவிநாராயண பட்டருக்கு இம் முதியவன்தான் ஓலையனுப்பியிருக்க வேண்டும்.

மேல்தளத்தில் இருந்த விசாலமான கூடத்தின் வாயில் வரை அரையனை அழைத்து வந்த வீரர்கள் அங்கேயே நிற்க, அந்த முதியவன் மட்டும் அரையனுடன் உள்ளே நுழைந்தான். அரையனை ஓர் இருக்கையில் அமரச் செய்த அந்த முதியவன் கோட்டைத் தலைவருடன் வருவதாகக் கூறி உள்ளே மறைந்தான்.

சற்று நேரத்தில் யாரோ வரும் அரவம்

கேட்டது. கோட்டைத் தலைவன்தான் வருகிறான் என்ற எண்ணத்துடன் எழுந்து நின்ற அரையன், முதலில் நுழைந்த முதியவனைத் தொடர்ந்து வந்தவரைக் கண்டதும் பிரமித்து நின்றான்.

வந்தது கோட்டைத் தலைவனல்ல; தலைவி!

சேரநாட்டுப் பாணியில் வெண் பட்டை அழகாகவும் மிக நேர்த்தியாகவும் உடுத்தியிருந்தாள் அவள். சுருண்டு சுருண்டு நீண்ட அவள் கூந்தலில் செம்பருத்திபொன்றைச் சூடியிருந்தாள். நன்றாக அகன்று நீண்ட அவள் விழிகள் அவள் சேர நாட்டைச் சேர்ந்தவளல்ல என்பதைப் பறை சாற்றிக் கொண்டிருந்தன. மலைநாட்டிலேயே வளர்ந்ததால் நன்றாகச் செழித்துக் கிடந்த அவள் அவயவங்கள் தேர்ந்த சிற்பியொருவன் சந்தன மரத்தில் செதுக்கியது போல் கருத்தையும் கண்களையும் கவர்ந்து நின்றன. நெற்றியில் அவள் இட்டிருந்த திலகமும் சோகம் வழிந்த கருநீல பெரிய விழிகளும் அரையனுக்குக் காஞ்சியில் கவி நாராயண பட்டரின் இல்லத்தில் சதா கண்ணீருடன் உலவிய அந்த மூதாட்டியை நினைவுபடுத்தின. அந்த மாது அவன் மனக் கண்முன் தோன்றினாள். அதே பெரிய கருநீல விழிகள் அதே எல்லையற்ற சோகம். அதே சுருண்ட நீண்ட கூந்தல். நரையும் கருமையும் மட்டுமே வித்தியாசம். அவனுக்கு மெல்ல விளங்கியது. தான் தேடி வந்தவள் இவள்தான் என்பதைப் புரிந்து கொண்டான்.

அவள் கோட்டைத் தலைவியாக விளங்கத் தான் எதிரே வீரர்களால் பிடிக்கப்பட்ட கைதியாக நிற்க வேண்டி வரும் என்று அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

அவன் வைத்த கண் வாங்காமல் தன்னை உற்றுப் பார்ப்பதையும் அவன் சிந்தனைகள் எங்கோ பறப்பதையும் கண்டு அவள் கேட்டாள் : ''யார் நீங்கள்? ஏன் என்னை அப்படி உற்றுப் பார்க்கிறீர்கள்?''

அந்தக் கேள்வியால் சுயநினைவு வரப் பெற்ற அரையன், திரும்பி அந்த முதியவனை ஒருமுறை பார்த்தான். அந்த முதியவன் சிரம் ஆமோதிப்பதற்கறிகுறியாக அசைந்து பல கதைகளைக் கூறாமல் கூறியது.

தனது கச்சையிலிருந்து பட்டுத் துணி முடிப்பு ஒன்றை உருவிய அரையன் அதைப் பிரித்து அதிலிருந்து பதக்கமொன்றை எடுத்தான். சுத்தமான பாண்டி நாட்டுத் தங்கத்தில் செய்யப்பட்டிருந்த அந்தப் பதக்கத்தின் நடுவே தாமரையின் வடிவம் பொறிக்கப்பட்டு ஒரு சங்கிலியில் இணைக்கப்பட்டிருந்தது.

இப்போது பிரமிப்பு அவளைத் தொற்றிக் கொண்டது. அவள் இடது கரம் தன் கழுத்திலிருந்த சங்கிலியையும் அதில் தொங்கிய பதக்கத்தையும் நோக்கி நகர்ந்தது.

இரண்டு பதக்கங்களும் ஒரே அச்சில் வார்க்கப்பட்டவை என்பதைப் புரிந்து கொண்ட அவள் விழிகளில் நீர் மெல்லத் திரண்டது.

''இது உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?''

''அதைப் பிறகு விளக்குகிறேன். இந்தக் கோட்டையின் தற்போதைய நிலவரம் பற்றிக் கூறுங்கள் இளவரசி'' என்றான் அரையன்.

''இளவரசியா?'' அவள் குரலில் வியப்பு பூரணமாகத் தொனித்தது.

''ஆம். நீங்கள் பாண்டிய நாட்டின் இளவரசி. மறைந்த ஜடாவர்ம பாண்டியரின் ஒரே மகள்'' தெளிவாக உச்சரித்தான் அரையன்.

''ஜடாவர்ம பாண்டியரின் மகள். பாண்டிய இளவரசி'' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்ட அந்தப் பெண் முகத்தில் பிரமிப்பு இன்னும் கூடியது.

''அப்படியானால் என் தாய்?'' அவள்

''எங்க மானேஜர் ரொம்ப பிராக்டிகலா பேசுவார்.''
''எப்படி...?''
''ஆபீஸ்ல யாரையாவது கூப்பிடணும்னா பியூனிடம் 'இன்னாரை எழுப்பிக்கிட்டு வா'ன்னுதான் சொல்லுவார்!''

- சீர்காழி வி. ரேவதி





''சிகரெட் புடிக்கிறதை இனிமேல் குறைக்கக்கணும்!''
''ஏண்டா?''
''சாதாரணமா வாயைத் திறந்தாலே புகை வர ஆரம்பிச்சுட்டுது!''

- ஞா. ஞானமுத்து

குரல் கரகரத்தது.

''காஞ்சியிலிருக்கிறார். தங்களை அழைத்துச் செல்லவே நான் வந்தேன். அடையாளத்திற்கு இந்தப் பதக்கத்தையும் கொடுத்தார். நீங்கள் பிரிவதற்கு முன் உங்களுக்கும் உங்கள் தாய்க்கும் ஒரே மாதிரியான இந்தப் பதக்கங்கள் ஜடாவர்ம பாண்டியரால் அணிவிக்கப்பட்டன.''

அந்தப் பெண்ணின் பிரமிப்பு நீங்கவில்லை.

நேரம் ஓடிக் கொண்டிருப்பதையும் உபதலைவன் திரும்பி வந்து விட்டால் தன் திட்டம் நிறைவேறுவது சிரமமாகி விடும் என்பதையும் அறிவு உணர்த்தவே, ''இளவரசி, இந்தக் கோட்டையின் தலைவர் என்ன ஆனார்? எப்படி இறந்தார்?'' என்று வினவினான் அரையன்.

கனவில் பேசுவது போல மெல்லத் தன் கதையைக் கூற ஆரம்பித்தாள் அந்தப் பெண்.

''நான் சிறுமியாக இருந்தபோதே இங்கு கொண்டு வரப்பட்டேன். எரிகின்ற ஒரு மாளிகையையும் நந்தவனத்தையும் தவிர எனக்கு வேறெதுவும் நினைவில்லை. இந்தக் கோட்டையின் தலைவரால் நான் இங்கு கொண்டு வரப்பட்டு அவர் மகளாகவே வளர்ந்தேன். எனக்கு இந்தக் கோட்டையையும் வீரர்களையும் நிர்வகிக்கப் பயிற்சி அளித்தார் அவர். புரவியேற்றமும், வாள் வீச்சும் கற்றுத் தந்தார். ஆனால், நான் என் தாய் தந்தையரைப் பற்றிக் கேட்ட போதெல்லாம் தட்டிக் கழித்தார்.

அவர் நோய்வாய்ப்பட்டு இறக்கும் போதும் இதைப் பற்றி ஏதும் கூறவில்லை. இங்கு ஓர் உபதலைவன் இருக்கிறான். என்னை அகற்றி விட்டுத் தான் தலைவனாக வேண்டுமென்று முயன்று கொண்டிருக்கிறான். என் தந்தையின் ஆதரவாளர்கள் அதிகமாக இருப்பதால் சற்றுத் தயங்குகிறான். ஆனால் எப்படியும் ஒருநாள் என்னை அவன் தீர்த்துக் கட்டி விடுவான் என்பது நிச்சயம். மெல்ல மெல்ல வீரர்களையும் தன் பக்கம் சேர்த்துக் கொண்டு வருகிறான். இந்தக் கோட்டை வெறும் ஆயுத சாலையாகப் பயன்படுவதால் சேரலாதருக்கும் இதில் அவ்வளவு அக்கறையில்லை.''

கோட்டை வாயிலில் அதே சமயம் அரவம் எழுந்தது. புரவிகள் பல வருவதும் கதவுகள் பெரும் ஓசையுடன் திறக்கப்படுவதும் கேட்டது. சாளரம் வழியே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பிய அந்த முதியவன், ''உபதலைவர் வந்து விட்டார்'' என்று அறிவித்தான்.

அந்தப் பெண்ணின் முகத்தில் கிலி படர்ந்தது. அரையன் சற்று நேரம் சிந்தனையிலாழ்ந்தான். பிறகு கூறினான்.

''இளவரசி, என்னை மீண்டும் சிறைக்கு அனுப்பி விடுங்கள்.''

அவள் திகைத்தாள்.

மீண்டும் தன் கச்சையிலிருந்து ஓலையொன்றை எடுத்து நீட்டிய அரையன், ''இதை ரகசியமாகப் படித்து விட்டுப் பின் எரித்து விடுங்கள். நான் இன்றிரவு உங்களை மீண்டும் சந்திக்கிறேன்'' என்றவன் அந்த முதியவனிடம் திரும்பி, ''என்னைச் சீக்கிரம் சிறைக்கு அழைத்துச் செல்லுங்கள்'' என்றான்.

முதிய வீரனுடன் அரையன் சென்று விட்டதால் தனித்து விடப்பட்ட அந்தப் பெண் தனது அறைக்குத் திரும்பினாள். அங்கு அந்த ஓலையைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள்.

''கார்குழலி!'' பெரும் மந்திரமொன்றை உச்சரிப்பது போல் அவள் உதடுகள் அந்தப் பெயரைத் திரும்பத் திரும்பக் கூறிப் பார்த்தன. ''தாய் தனக்கிட்ட பெயர் கார்குழலியென்ற நினைவு மெல்ல மெல்ல புகை போல் மேலெழும்பி அவள் சித்தத்தை எட்டியது. அரண்மனையும் அழகிய நந்தவனமும் தாயின் அன்பு சொட்டும் விழிகளும் நிழல் வடிவமாக அவள் நெஞ்சில் தோன்றின.

தொடர்ந்து ஓலையைப் படிக்கும் போது அவள் முகபாவம் மகிழ்ச்சியும், துக்கமும், கோபமும் கலந்து உணர்ச்சிப் பிரவாகமாக ஜொலித்தது. பாதி வரை படித்து முடித்த கார்குழலி வாசலில் ஏதோ அரவம் கேட்கவே சட்டென்று திரும்பினாள்.

அவள் கரத்திலிருந்த ஓலையையும், அவளது முகபாவத்தையும் கூர்ந்து கவனித்தபடி, அறையின் வாசலை இடித்து விடுபவன் போல ஆஜானுபாகுவாக நின்றிருந்தான் உபதலைவன்!

(தொடரும்)



''இன்னிக்கு பேப்பர் படிச்சீங்களா?''
''இல்லை, என்ன விசேஷம்?''
''தெரியலே! காசு இருந்தா ஒரு பேப்பர் வாங்குங்க. ரெண்டு பேருமே என்ன விசேஷம்னு தெரிஞ்சுக்கலாம்!''
- அதிரைபுகாரி

# தரிசு நிலம்

வயல்களில் பெரிய பெரிய லாரிகளும் கிரேன்களும் வந்து இறங்கிக் கொண்டிருந்தன. வரிசையாய் மதுரை வீரன் கணக்காய், கரைகளில் நிற்கும் பனைமரங்களும் வரப்புகளும் காணவில்லை. தை மாசம் இந்த நேரம் கதிர் விட்டு, கொக்கும், நாரையும் சேற்று வயல் முழுக்க நிற்கும். பட்டாளத்தார் போன மாட்டுப் பொங்கலுக்கு ரெண்டு மடையான் கட்டுக் கொடுத்தார். ராத்திரி சாம்பிராணி போட்டுச் சாப்பிடறதுக்குள்ள நாக்குல நீர் ஊறிப் போச்சுது. இப்போ எங்கு பார்த்தாலும் புழுதியும் கப்பி ரோடுமா ஆயிடுச்சு. எந்த இடம் உன் வயல்ன்னு கேட்டாக் கூட காட்ட முடியாது. எல்லாம் ஒரே தெடலா தரிசு நிலமாப் போயிடுச்சு.

காலையில் வந்து பார்த்தா ரோட்டோரம் நெருப்பு மூட்டி மைதாவைப் பிசைஞ்சி ரொட்டி கட்டுத் திங்கும் இந்தி ஆசாமிங்க. ஊரே வித்தியாசமாயில்ல போச்சு!

நாகமுத்து மடித்துக் கட்டிய வேட்டியுடன் சிந்தனையை ஓட விட்டுக் கொண்டே நடந்து கொண்டிருந்தார்.

வெள்ளாமை செஞ்சாலும் உரக்கடையிலே அட்வான்ஸ் கேக்கலாம். இப்போ யாரு பத்து காசு குடுப்பா? வர்ற வைகாசியிலே பொண்ணுக்குக் கல்யாணத்தை முடிச்சிரணும். வாங்குற பணத்தை அப்படி இப்படி பண்ணிப்புட்டா வெவரம் இல்லாத ஆளுன்னு கேலி பண்ணிப் போடுவானுங்க. பூங்குளமே ரொம்ப மாறிப் போச்சு!

நகரத்தில் பெயர் வாயில் நுழையாத ஒரு தெருவின் பழைய கட்டடத்தில் அந்த அலுவலகம் இருந்தது. உள்ளே பெரிய பெரிய மர பீரோக்களும் அதன் தலைகளில் பெரிய பெரிய ரிஜிஸ்தர்களுமாய் நின்று கொண்டிருந்தன. ஒரு பீரோவின் மறைவில் நாலைந்து நாற்காலிகளுக்கு மத்தியில் நாகமுத்து தேடிய அலுவலர் உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றிலும் கிளார்க்குகள் உட்கார்ந்து பெரிய பேரேடுகளைப் பார்த்துக் குறித்துக் கொண்டிருந்தார்கள். நாகமுத்து உள்ளே எட்டிப் பார்த்ததும் வெள்ளைச் சீருடை அணிந்த அலுவலக உதவியாளர் ''என்ன வேண்டு ஒனரா...?'' என்று கேட்கவும் நாகமுத்து என்னவென்று புரியாமல் விழித்தார். ''உங்க நெலமும் அடிபட்டிருக்கா?'' என்று மறுபடியும் கேட்க, 'ஆமாம்' என்று தலையை ஆட்டினார்.

ஒரு பழைய துணிக்கடைப் பையிலிருந்து கட்டாகக் காகிதங்களை எடுத்து அலுவலரிடம் கொடுத்து விட்டுக் கையைக் கட்டிக் கொண்டு நின்றார். ''எல்லா பத்திரத்தையும் கொண்டாந்திட்டீங்கல்ல... சரி அந்த கிளார்க்குகிட்டே கொடுத்திட்டுப் போங்க...'' என்றார்.

''பணம்... எப்பங்க கெடைக்கும்? பொண்ணுக்கு வர்ற வைகாசியில சம்பந்தம் பேசிட்டேன்...'' என்றார் நாகமுத்து மெல்லிய குரலில்.

''இப்பத்தானே என்கொயரி போட்டிருக்கு... பத்திரத்தை எல்லாம் படிக்கப் பார்த்து, உங்க பேருக்கு அவார்டு பாஸ் பண்ணி, செக் கொடுத்துடுவோம்...'' என்று அலுவலர் பொறுமையாகச் சொல்லி நாகமுத்துவை அனுப்பி வைத்தார்.

வீட்டை நெருங்கும் போது கருப்பன் வாலை ஆட்டிக் கொண்டே நாகமுத்துவின் கால்களுக்கிடையில் புகுந்து தன் விசுவாசத்தைக் காட்டிக் கொண்டது. நிமிர்ந்து வீட்டைப் பார்க்கையில் தெரிந்தது - புத்தம் புது சைக்கிள் ஒன்று வாசலில் நிற்பதும், திண்ணையில் வெள்ளை வேட்டி ஆசாமி ஒருவர் படுத்திருப்பதும். நாகமுத்துவுக்கு அவசரம் தாங்கவில்லை. யாராக இருக்கும் என்று நடையை வேகமாக்கினார்.

சம்பந்தி! ஓகையிலிருந்து வந்திருந்தார். நாகமுத்துவைப் பார்த்ததும் எழுந்து உட்கார்ந்து கொண்டார். நாகமுத்துவின் மனைவி உள்ளே சென்று இன்னொரு பாயைக் கொண்டு வந்து திண்ணையில் போட்டாள்.

''என்ன சம்பந்தி... பொங்க கழிச்சுப் பேசிக்கிடலாம்ன்னு சொன்னீங்க...

லதா சங்கரலிங்கம்



பையன் அவசரப்படுறான்... மூணு மாசம் விசாவிலதான் வந்திருக்கான். அதுக்குள்ள திரும்ப லைன்னா... மலேசியாக்காரன் 'சாப்' குத்தி திருப்பி அனுப்பிடுவானுல்ல...?''

''இப்பத்தான் ஆபீஸ் போயிட்டு வர்றேன்... இன்னும் ஒரு வாரம் பத்து நாளுல பணம் தந்திடுவோம்ன்னு சொல்றாங்க. வைகாசியில எப்படியும் முடிச்சிடுவோம். நீங்க நாளைப் பார்த்து லெட்டர் போட்டுறுங்க...'' என்று சொல்லவும், வந்திருந்தவர் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டார்.

''என்ன சம்பந்தி அதுக்குள்ள... கிளம்பிட்டீங்க... இருந்து சாப்புட்டுப் போவலாமே!''

''நீங்க வர்றதுக்குச் செத்த முந்திதான்... காப்பி குடிச்சேன். வெத்தலை மாத்திக்கறதுக்குள்ள கை நனைக்கக் கூடாது பாருங்க. சம்பந்தம் முடியட்டும். கோழி அடிச்சி வைச்சிட்டுக் கூப்பிடுங்க. சம்பூர்ணத்தையும் அழைச்சிட்டு வந்து... சாப்புட்டுட்டுப் போறேன்...'' என்று சொல்லி விட்டுக் கிளம்பிச் சென்று விட்டார்.

**உ**ள்ளே சென்று சாப்பிட உட்கார்ந்தார் நாகமுத்து.

''என்ன? பணம் எப்ப கெடைக்கும்ன்னு கேட்டீங்களா...'' கேட்டுக் கொண்டே அவர் மனைவி பரிமாறினாள்.

''இன்னும் பத்து நாள்... அதிகமாப் போனா ரெண்டு வாரத்தில நிச்சயமா வந்திடும்புள்ள...''

''எம்மா ரூவா வருமாம்..?''

''நல்ல ரேட்டுதான் போட்டிருக்காங்கன்னு பிரசிடெண்ட் சொன்னாரு...''

அப்பாவும் அம்மாவும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு விட்டு மகன் செந்தில் அப்பாவிடம் வந்து உட்கார்ந்து கொண்டான்.

''ஏம்பா... சாப்பிட்டியா?''

''ம்... ப்பா...''

''என்னப்பா...?''

''பணம் வந்தோன்ன... நம்ப வூட்டுக்கு டீ.வி. ஒண்ணு வாங்குப்பா. காரைக்கால் வரைக்கும் நல்லாத் தெரியுதாம்...''

மகனின் தலையை வாஞ்சையுடன் தடவிக் கொண்டே வாங்கிடுவோம்ப்பா... அக்கா கல்யாணச் செலவு போக மிச்ச பணம் உனக்குத்தானே! நீ படிச்சுப் பெரியவனா ஆகி இங்கேயே இந்திக்காரன் கூட வேலைக்

குப் போகணும் என்று மகனுடன் பேசிக் கொண்டிருந்தார்.

அன்று நாகமுத்து திண்ணையில் உட்கார்ந்து வாசலைப் பார்த்துக் கொண்டிருந்தார். பிடாரி கோவில் திருப்பத்தில் புழுதியைக் கிளப்பிக் கொண்டு கார் ஒன்று வளைந்து நெளிந்து வந்து கொண்டிருந்தது. கார் பிரசிடெண்ட் வீட்டு வாசலில் வந்து நிற்கவும்... நாகமுத்து தன் மகனைக் கூப்பிட்டு என்னவென்று பார்த்து வரச் சொன்னார். மகன் திரும்ப வந்து இவரிடம் என்னவென்று சொல்வதற்குள் கிராமம் முழுக்க அந்தச் செய்தி பரவி விட்டது. 'நிலம் எடுத்தவங்களுக்குப் பணம் கொடுக்க ஆபீஸருங்க வந்திருக்காங்களாம்', என்று சொல்லவும் நாகமுத்துவும் பிரசிடெண்ட், வீட்டிற்குச் சென்று பார்த்தார். ஒவ்வொருத்தராய் பிரசிடெண்ட் அடையாளம் காட்ட, அதிகாரிகள் 'செக்கை'க் கிழித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். கிட்டத்தட்ட எல்லோரும் சென்று விட்டார்கள். 'அடுத்து நமக்குத் தான். எவ்வளா ரூவா வருமோ' என்று நாகமுத்து யோசித்துக் கொண்டே தோளில் இருந்த துண்டைச் சரிசெய்து கொண்டார்.

''என்ன நாகமுத்து...? நீ கையெழுத்துப் போடலையா... போடு கையெழுத்த...'' என்று பிரசிடெண்ட் சொன்னதும், ''இன்னும் போடலீங்களே... பேரைக் கூப்பிட்டுமேன்னுதான் ஓரமா நிக்கேன்...''

அதிகாரிகள் காகிதக் கட்டுகளைப் புரட்டினார்கள். நாகமுத்துவின் பெயர் அதில் இல்லை.

''நாகமுத்தா...? உங்க அப்பா பேரு என்ன சொல்லுங்க...'' என்று அதிகாரி ஒருவர் கேட்டார்.

''ராமசாமிங்க...'' என்று நாகமுத்து சொல்லும்போதே பணம் கிடைக்காதோ என்று அவருக்குக் கலக்கமாக இருந்தது. மறுபடியும் அதிகாரிகள் காகிதங்களைப் புரட்டி விட்டு ''இதுல உங்க பேரு இல்லையே...'' என்று சொன்னவுடன், மற்றொரு அதிகாரி 'ரிசர்வ்' லிஸ்டைப் பாருங்களேன் என்று சொல்ல, அதில் நாகமுத்துவின் பெயர் மூன்றாவதாக இருந்தது.

''உங்க பணத்தைக் கோர்ட்ல டெபாஸிட் பண்ணப் போறோம்... அங்க போய் வாங்கிக்கிங்க...'' அதிகாரி முகத்தில் சலனமில்லாமல் உச்சரித்தார்.

''எதுக்கு எம் பணத்தைக் கோர்ட்ல கட்றீங்க?... நெலம் என்னோடது... பத்திரம் கூட இருக்கே...''

''மூலபத்திரத்தில் இது டிரஸ்ட் சொத்துன்னு பதிவாகி இருக்கு. பத்திரம் சாசனம் ஆனாலும் நிலம் உங்களுக்குக் கட்டுப்படாது...''

''இதை வாங்கிப் பதிமூணு வருஷம் ஆச்சுங்களே.. பிரசிடெண்ட் அய்யாவுக்குக் கூடத் தெரியும்... உங்க முன்னாடிதானுங்க அய்யா... பணத்தை எண்ணிக் குடுத்துப் பத்திரம் எழுதினேன்...'' நாகமுத்து பரிதாபமாகக் கெஞ்சினார்.

''இருக்கிற சட்டத்தை வைச்சுப் பார்த்துத்தான் உங்க பணத்தைக் கோர்ட்ல டெபாஸிட் பண்ணப் போறோம். இதுக்கு மேலே எதுவுமே செய்ய முடியாது...'' அதிகாரிகளுக்கே உரிய பதில் வந்தது.

நாகமுத்து அழாத குறையாக ''என் பொண்ணுக்கு வர்ற வைகாசியில சம்பந்தம் பேசிட்டேங்க... நீங்க பணத்தைக் கொடுக்கலேன்னா... என் குடும்பம் நடுத் தெருவுக்கு வந்திடுங்க சார்... நெலத்தையும் புடுங்கிகிட்டு... பணமும் கொடுக்கலைன்னா... என்னங்க... பண்ணுவேன்...?''

''சுத்த விவரம் புரியாத ஆளு...! கோர்ட்ல டெபாஸிட் பண்ண.. 'ப்ரொசீடிங்ஸ்' போட்டாச்சு... இனிமே உங்க பணத்தைக் கோர்ட்லதான் வாங்கிக்கணும்ன்னு... எத்தனை தடவை சொன்னாலும் புரிஞ்சிக்க மாட்டேங்கிறாரே...'' என்று சொல்லிக் கொண்டே அதிகாரிகள் காரில் ஏறி அமர்ந்தனர். நாகமுத்துவின் முகத்தில் புழுதியை இறைத்து விட்டு கார் மறைந்தது.

நாகமுத்துவுக்கோ 'நிலத்தைக் கிரயம் கொடுத்து வாங்கினோம்... பத்திரமும் பதிவாயிருக்கு; அப்படியும்... நிலம் சொந்தம் இல்லை என்கிறார்களே...!' என்ற குழப்பம். விவரம் புரியாமலே நாகமுத்து கலங்கிய கண்களுடன் பிடாரி கோவில் திருப்பத்தில் வளைந்து செல்லும் காரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.



●● உலகில் 500 வகையான குரங்கு இனங்கள் இருக்கின்றன. மிகவும் பெரிய குரங்கு கொரில்லா. மிகவும் சிறிய குரங்கு எது தெரியுமா? பிரேஸில் நாட்டில் உள்ள 'பிக்மி மர்மோஸெட்'. இதை ஒருவர் தன் கைப்பிடிக்குள் அடக்கிக் கொண்டு விடலாம். இதன் எடை அரை பவுண்டுக்கும் குறைவு. வாலின் நீளம் ஓர் அடி.

– சக்தி. கமலேஸ்வரன்

சார்மினார் சானல் :

# அகாதமி விருதுகள்: அள்ளிக் கொண்ட தமிழர்கள்!



* உமையாள்புரம் கே. சிவராமன்

சங்கீத நாடக அகாதமி விருதுகள் வழங்கும் விழா பொதுவாகத் தலைநகர், டில்லியில் நடைபெறுவது வழக்கம். ஹக்ஸர் கமிட்டி, இதனை இதர பிரதேச தலை நகரங்களில் நடத்தினால் கலைஞர் - ரசிகர் தொடர்பில் ஒரு கூடுதல் பரிமாணம் ஏற்படுமென்ற சிபாரிசின் அடிப்படையில், இம்முறை வோட்டு ஹைதராபாத்திற்கு.

'92-ஆம் ஆண்டுக்கான விருதுகள் வழங்கும் விழாவுக்கு ஜனாதிபதி வருகிறார் என விளம்பரப்படுத்தப்பட்டது. ஆனால் நக்ஸலைட்டுகளின் 'அபகரிப்பு - பிணைக்கைதி' நாடகம் காரணமாக அரக இருக்கும் டென்ஷனில் தன்னால் வேறு எதற்குத் தொந்தரவு என்று சங்கர் தயாள் சர்மா ஜகா வாங்கி விட்டார்.



ராஷ்டிரபதி வருகிறார் என்று, பாதுகாப்பு காரணங்களுக்காக அழைப்பிதழ்களை 'வடிகட்டி' அனுப்பினார்கள். ஆரம்ப தினத்தன்று பி.ஜே.பி. ஊரடைப்பு வேறு; கூட்டம் சுமார்தான்!

பஞ்சகச்சமும், ஜிப்பாவுமாக முகம் மலர அகாதமி சேர்மன் கிரிஷ் கர்னாட் வரவேற்பு நல்க, கவர்னர் கிருஷ்ண காந்த் விருதுகள் வழங்கினார்.

இந்த வருடம் நாடக அகாதமி அங்கத்தினர் (fellowship) என்ற கௌரவம் பெற்ற மூவரில் டி. கே. பட்டம்மாள் ஒருவர். இந்தப் புகழாரம் இதுவரை தேங்காய் மூடிக் கச்சேரி மாதிரிதான் இருந்து வந்தது. இப்போது ரூ 25,000 உண்டு.



* வலங்குடி ராம். சுவாமிநாதன்

இந்த ஆண்டு பட்டம்மாள் உட்பட, விருது பெற்ற 27 நபர்களில் 8 பேர் தமிழகத்துக் கலைஞர்கள். யேசுதாஸுக்கு Performing Arts in Media துறையில் விருது. அவரையும் சேர்த்தால் நவநாயகர்கள். மூன்றில் ஒரு பங்கு வெற்றி நமதே!

விருது 'கன'ரகம்தான்.

ரூ 25,000 பணமுடிப்பு. அங்கவஸ்திரம் என அழைத்தாலும் தில்லி குளிரைத் தாங்கும் ஷால்; ஹிந்தியில் தாமிரபத்ர சந்நத்; ('இதைப் படிக்கச் சொல்லுங்க' என்றார் புகையிலை மணத்துடன் ஒரு தமிழ்க் கலைஞர்); போக வர இருவருக்கு விமான சார்ஜு; ஸ்டார் ஹோட்டலில் விருந்தோம்பல்,



* டி. கே. பட்டம்மாள்



* கே. ஆர். குமாரசுவாமி



* கே. ஜே. சரசா



* கே. ஜே. ஏசுதாஸ்



* பூர்ணம் விசுவநாதன்



* நவுஷத் அலி

இரட்டை மாநகரில் கார் பவனி... ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்டவர்கள் ஆந்திர அரசு கலாசார செயலர் காயத்ரி ராமச்சந்திரன், ஐ.ஏ.எஸ்., டைரக்டர் உமா மகேஸ்வர ராவ், முதலியோர்.

இசை பட்டம்மாள் (73), ஹரிகதை பாலகிருஷ்ண சாஸ்திரிகள் (73) வீணை எம்.கே. கல்யாணராம பாகவதர் (84), கர்நாடக இசை கே. ஆர். குமாரஸ்வாமி (79) -இவர்கள் விருதுபெற மேடையேற சிரமப்பட்டனர். வயதைக் கருதி மேடையிலேயே இடம் அளித்திருக்கலாம்.

தமிழ் நாடக உலகில் 25 வருடங்களுக்குப் பிறகு விருது வாகை சூடியிருப்பவர் நாடக சூடாமணி பூர்ணம் விசுவநாதன். வழுக்கைத் தலையானாலும், இளமை மாறாத பொலிவுடன் தோன்றினார், பூர்ணம். சிங்கமய்யங்காருக்கு ஸ்டேஜில் ஒரு நாடக சான்ஸ் தந்திருக்கலாம், அகாதமி.

இந்த வருடம் மற்றொரு சிறப்பு. தேவாரத்திற்கு மகுடம் சூட்டியது. ஓதுவார்கள் நலிந்து வரும் நாட்களில் இருமுறை இசைக்கும் கலைஞரைக் கௌரவித்திருப்பது பாராட்ட வேண்டிய செயல். அந்த முதல் பெருமைக்குரியவர் லால்குடி சுவாமிநாதன். 'சுபாஷீஸ்வரர் கருணை' என்கிறார், தென்னிசைத் தென்றல். நாதாளும் நாத்தழும்ப நாதன் நாமம் இசைக்கும் ஓதுவார்களின் பொருளாதார இழிவுநிலை பற்றி வருந்துகிறார்.

பாரதத்தின் பழம்பெருங் கலைகளைப் போற்றும் விழாதான். எனினும், நவுஷத் அலி (சினி இசை) பரிசு பெற்ற போது ஏற்பட்ட கரவொலி யாருக்கும் கிடைக்கவில்லை!

- சுபஸ்ரீ

---

ஒருவருடைய இருதயம், சிறுநீரகம் போன்றவைகளை மற்றொருவருக்குப் பொருத்தும் போது, பெரும்பாலும் பெறுபவரின் உடல் அதை ஏற்க மறுப்பதால், பக்க, எதிர் விளைவுகள் ஏற்படுவதைக் காண்கிறோம். ஆனால் கண்ணின் கருவிழி தேவையான யாருக்குப் பொருத்தப்பட்டாலும் இப்பிரச்னை எழுவதில்லை. ஏன்? கருவிழியிலும், விழி லென்சிலும் இரத்த நாளங்களே இல்லை. அதனால் புதிய உடலின் ரசாயன அமைப்பு, மாற்றங்களுடன் ஒவ்வாமை என்னும் பிரச்னையும் ஏற்படுவதில்லை. இதனால் ஒருவர் கண்தானம் அளித்தால் இருவர் எளிதில் கண்ணொளி பெற முடிகிறது.

- அ. ஷண்முகசுந்தரம்

மிசோராம் மாநில மக்களிடையே சொத்துரிமை வித்தியாசமாக உள்ளது. அரசுச் சட்டம் எப்படி இருந்தாலும் கடைசி மகனுக்குத்தான் சொத்துரிமை வழங்கப்படுகிறது. மூத்த பிள்ளைகள் திருமணம் முடிந்து, குடும்பத்தை விட்டு வெளியேறி விடுவார்கள். அதனால் பெற்றோர்களைப் பாதுகாப்பது கடைசி மகனின் கடமையாகிறது. ஆகவேதான் கடைசி மகனுக்குச் சொத்து!

நன்றி : 'மிசோராம் மாநிலம்'

தகவல் : ராஜிராதா



# சக்கரவர்த்தித் திருமகன்

## 24. சீதையின் தீர்மானம்

அந்தப்புரத்தில் நடந்த விஷயங்கள் இன்னும் நகரத்து ஜனங்களுக்குச் சரியாகத் தெரியாது. ராமனோ வனம் செல்லுவதில் தன் முழுமனதையும் செலுத்தி அதற்கு வேண்டியதையெல்லாம் மிக துரிதமாகக் கவனித்து வந்தான்.

எல்லாக் காரியங்களும் முடித்து விட்டு கௌசல்யா தேவியிடம் மங்கள ஆசீர்வாதம் பெறப் போனான்.

''நீ போய் விட்ட பிறகு நான் இந்த அயோத்தியையில் எப்படியிருக்க முடியும்? உன்னுடன் நானும் வனம் போவதே நலம்'' என்று கௌசல்யை திரும்பச் சொன்னாள்.

வேண்டாமென்று ராமன் அவளுக்குக் காரணங்களையும் தருமத்தையும் எடுத்துக் காட்டினான். அரசனாகிய புருஷனை விட்டு விட்டு மகனோடு காடு செல்வது தகாது. மூப்படைந்த புருஷனுக்குச் சிசுருஷை செய்து கொண்டு சுகமோ கஷ்டமோ சமாளித்துக் கொண்டு அயோத்தியையில் இருப்பது தான் கடமை என்று ராமன் அவளுக்கே தெரிந்த விஷயமானாலும் துக்கத்தால் குழப்பமடைந்திருந்த அவளுக்கு எடுத்துச் சொன்னான். தாயுள்ளத்தில் கிளம்பிய புகையை அகற்றி விட்டு, ராமன் சொல்லுவதே சரி என்று ஒப்புக் கொண்டாள்.

மகனை சுவஸ்தி மந்திரங்கள் சொல்லி ஆசீர்வதித்து, ''தகப்பன் ஆணையைச் செய்து முடித்து விட்டு வெற்றியுடன் திரும்பி வருவாயாக!'' என்றாள்.

''பதினான்கு வருஷங்களையும் சுலபமாகக் கழித்து விட்டு வந்து விடுகிறேன்'' என்று ராமனும் சிரித்துக் கொண்டு சொல்லி அவளைத் தேற்றினான்.

தாயின் மங்கள ஆசிகளைப் பெற்ற சக்கரவர்த்தித் திருமகனுடைய முகத்தில் தேஜஸ் முன்னைவிட அதிகமாகப் பிரகாசித்தது என்கிறார் முனிவர். கடமையைக் கருதி ஒரு பெரிய தியாகம் செய்யச் சங்கற்பம் செய்பவர்களுடைய முகத்தைப் பார்க்கும் போதுதான் முனிவருடைய சொற்களின் பொருள் விளங்கும்.

அரசன் அழைத்து வரச் சொன்னான் என்று சுமந்திரனோடு சென்றானல்லவா ராமன்? தேரும் குடையும் சாமரங்களும் பரிவாரமுமாக எப்போது திரும்பி வருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் சீதை. தந்தையின் வாக்கை நிறைவேற்றுவதற்காக வனத்துக்குப் போகிறேன் என்று தன் காதலிக்கு எவ்வாறு சொல்லிச் சமாளிப்பது என்கிற ஏக்கத்தோடே சென்றான் ராமன். தேரும் சாமரங்களுமின்றி ராமன் தனியாகத் திரும்பிவந்ததைப்

ராஜாஜி

பார்த்தாள். முகத்தில் ஏக்கத்தையும் கண்டாள் சீதை.

'ஏன் என் நாதர் ஏதோ மனத்தில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்? எது எப்படியாயினும் நம்மிருவருக்கும் உள்ள அன்பு ஒன்று போதாதா?' என்று எண்ணி, ''என்ன விஷயம், ஒருமாதிரி இருக்கிறீர்களே?'' என்று கேட்டாள்.

வெகு சுருக்கமாகவே ராமன் நடந்த விஷயத்தைச் சொன்னான். சொல்லி விட்டு, ''வைதேஹி, நீ என்னை விட்டுப் பிரிந்து இவ்விடம் தனியாக இருப்பதில் உனக்கு ஏற்படக்கூடிய துக்கம் எனக்குத் தெரியும். ஆயினும் தரு மத்தை நீ நன்றாக அறிவாய். ஜனக னுடைய மகளுக்கு நான் சொல்ல வேண்டியதொன்றுமில்லை. மகாராஜா விடமும் தாய்மார்கள் மூவரிடமும் ஜாக்கிரதையாக நடந்து கொள். மற்ற அந்தப்புரப் பெண்களைக் காட்டிலும் அதிகமாக நீ எதையும் எதிர்பார்க்க வேண்டாம். அரசனாகிய பரதனிடம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். உன்னிடம் அவனுக்குள்ள பிரியம் குறையாமலிருக்கும்படி நடந்து கொள்ள வேண்டும். வைதேஹி! என் மேல் நீ வைத்திருக்கும் அன்பு கொஞ்ச மும் குறையாமல் பார்த்துக் கொள்வா யல்லவா? நான் வனத்தில் பதினான்கு வருஷம் கழித்துத் திரும்பி வருவேன். அதுவரையில் பூஜையும் விரதங்களும் சரியாகக் காத்து வர வேண்டும். கௌசல்யாதேவி மிகவும் துக்கப் படு வாள். அவளைக் கவலையோடு பார்த்து வர வேண்டும். பரதனும் சத்ருக் னனும் எனக்கு மிகப் பிரியமானவர்கள். அவர்களைச் சகோதரர்கள் போல் கருதி வருவாய். அரசகுல சுபாவங்களை மனத்தில் வைத்து நடந்து கொள். என்னை அதிகமாகப் புகழ்ந்து பேசாதே. நான் இன்றே வனம் போக வேண்டும். மனத்தை நிலையில் வைத் துக் கொண்டிருப்பாயாக'' என்றான் ராமன்.

இந்தப் பேச்சைக் கேட்ட சீதைக் குப் பெருங்கோபம் வந்துவிட்டது. அன்பெல்லாம் கோப உருவமாக வெளிப்பட்டது.

''நன்றாகப் பேசினீர்! தருமமெல் லாம் அறிந்த ராஜகுமாரரே! எனக்குச் சிரிப்பு வருகிறது. புருஷன் வேறு மனைவி வேறு என்பதை இன்றுதான் உம்முடைய பேச்சில் அறிந்தேன். ராமன் வனம் போக வேண்டியதானால் அந்த ஆணையானது சீதைக்கும்தான். வனத்தில் செல்லும்போது நான் முன்





## அடுத்த இதழில்....

●● மருத்துவர்களுக்கு உதவும் மந்திரக் கரங்கள்!
- நர்சுகள் பற்றிய விரிவான கட்டுரை

●● உலகப் புகழ்பெற்ற ஒப்பனைக் கலைஞர்!
- ஷானாஸ் ஹுசேனுடன் சந்திப்பு

னால் சென்று காட்டுப் பாதையிலுள்ள முள்ளையும் புல்லையும் மிதித்து உமக்கு மெதுவாக்கிக் கொண்டு செல்வேன். பிடிவாதம் செய்கிறேன் என்று கோபம் கொள்ள வேண்டாம். என்னுடைய தாயும் தந்தையும் தருமத்தைப் பற்றி எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். நீர் இன்று எனக்குச் சொன்னது நான் இதற்கு முன் கேட்டதற்கெல்லாம் முற்றிலும் விரோதமாக இருக்கிறது. நீர் செல்லும் இடம் நானும் கூடச் செல்ல வேண்டும் என்பதே நான் கற்ற ஒழுக்கம். இன்றே நீர் வனம் போக வேண்டியதானால் உம்முடன் நானும் இன்றே போவேன். இதைப் பற்றி அதிகம் பேச வேண்டிய அவசியமில்லை. வனம் சென்றால் நான் கஷ்டப்படுவேன், துக்கப்படுவேன் என்றெல்லாம் எண்ண வேண்டாம். வனவாசத்தை மிகவும் சந்தோஷமாகவே அனுபவிப்பேன். உம்முடன் இருந்தால் வனவாசம் என்பது எனக்கு ஒரு விளையாட்டாகத்தான் இருக்கும். இங்கே என்னைத் தனியாக விட்டுப் போகாதீர். நீர் வனம் சென்றால் இங்கே எனக்கு என்ன வேலை? வனத்தில் என்னால் உமக்கு ஒரு தொந்தரவும் ஏற்படாது. காயும் கிழங்கும் சாப்பிட்டுக் கொண்டு நிச்சயமாக உமக்கு முன்னால் நான் நடந்து செல்வேன். உம்முடன் சென்று மலையும் ஆறும் பார்த்து மகிழவேண்டுமென்பது என் ஆசை. பறவைகளும் புஷ்பங்களும் நிறைந்த வனத்தில் உம்முடன் நானும் இருந்து சந்தோஷமாக ஆறுகளில் குளித்தும் நித்திய கருமங்களைச் செய்தும் சுகமாகக் காலம் கழிப்பேன். உம்முடனில்லாமல் சுவர்க்கமும் எனக்கு வேண்டாம். என்னைத் தனியாக விட்டுப் போனால் என் மரணம் நிச்சயம். நான் உம்மிடம் யாசிக்கிறேன். என்னை அழைத்துப் போக வேண்டும். என்மேல் இரக்கம் கொள்வீர். என்னை நிர்க்கதியாக்க வேண்டாம்'' என்றாள் சீதை. கோபமாக ஆரம்பித்தவள் மிகவும் கெஞ்சிக் கேட்டு முடித்தாள்.

ராமன் காட்டில் ஏற்படும் பயம், கஷ்டம் எல்லாவற்றையும் விஸ்தாரமாக எடுத்துச் சொல்லி, ''நீ காட்டுக்கு என்னுடன் போவது தகாது'' என்றான்.

சீதையின் கண்களில் நீர் பெருகிற்று. ''புலி, சிம்மம், கரடி, பாம்பு இவையெல்லாம் உம்மைக் கண்டால் தூர விலகிச் செல்லும். நீர் சொல்லும் வெயில், மழை, காற்று, பசி, முள் அனைத்தும் நான் சந்தோஷமாகப் பொறுத்துக் கொள்வேன். எனக்கு வனவாசத்தைப் பற்றிக் கொஞ்சமும் பயமில்லை. நீர் என்னை இங்கே விட்டு விட்டுப் போனீரானால் என் உயிர் என்னை விட்டு நீங்கும், நிச்சயம்'' என்று சந்தேகத்துக்கும் மறு பேச்சுக்கும் இடமின்றிச் சொல்லி விட்டாள்.

சீதை அத்தோடு விடவில்லை. ''நான் மிதிலையிலிருந்த காலத்தில் பிராமணர்களும் ஜோதிஷர்களும் இவளுக்கு வனவாசப் பிராப்தி என்று என்னைக் குறித்து என் தாயிடம் சொல்லியிருக்கிறார்கள். நான் தனியாக வனவாசம் செய்ய முடியுமா? உம்முடன் சேர்ந்து வனவாசம் செய்துவிட்டு எப்படியும் நடக்க வேண்டிய அந்த நிகழ்ச்சியைச் சுகமாக முடித்து விடுவதற்கு இதுவே சமயம். வனவாசம் மிகக் கஷ்டம் என்பதெல்லாம் யாருக்கு? இந்திரியங்களை வசப்படுத்தாமலிருக்கும் ஸ்திரீ புருஷர்களுக்குத்தான். நீராவது நானாவது அவ்விதம் கஷ்டப்பட மாட்டோம். என்னைத் தடுக்காதீர்'' என்றாள்.

(தொடரும்)

# அபார வெற்றியும் அநியாய விலைகளும்

● ஒருவழியாக மெட்ராஸ் கிரிக்கெட் மகோத்ஸவம் என்பது கோடி பேரின் 'காலர் தூக்கலோடு' மூக்காலே அரைக்கால் நாள் முன்னதாக முடிந்து விட்டது. கல்கத்தாவில் ஜெயித்தது வெறும் ஃப்ளுக் அல்ல என்பதை நிரூபித்தது ஒருபுறம் இருக்கட்டும், இன்னும் கொஞ்ச நாளைக்கு அஸாருக்கு 'புலி' வராது. 'கிலி'யும் இல்லை. கபிலின் ஐந்தாயிர சாதனை, டெண்டுல்கரின் எலக்ட்ரிக்சர நூற்று அறுபத்தைந்து, கும்ப்ளேயின் விக்கெட் வேட்டை என்று அசைபோட ஆயிரம் விஷயம் இருப்பினும், கிரௌண்டுக்கு உள்ளே மருந்துக்குக் கூட ஒரு தமிழ்நாட்டு பிளேயர் இல்லாததுதான் உறுத்தல். ஸ்ரீகாந்தை விடுங்கள்; ராமனை மறந்தது நியாயமென்று தோன்றவில்லை.

● மெட்ராஸைப் பொறுத்தவரை ரசிகர்களுக்குப் பஞ்சமில்லை. தெரிகிறதோ, புரிகிறதோ - அரங்கம் நிறைந்த ஐந்து நாட்கள். பெல்ஸ் ரோடு நெடுக பார்டர் வைத்துத் தைத்தாற்போல தலைகள், தலைகள்! (ஏரியல் வியூ) ரஜினி படம் கெட்டது, பிளாக்கில் பெவிலியின் டிக்கட்கள் (நாலாவது நாள்).

● தப்பித் தவறி ஸ்டேடியத்தின் உள்ளே இருக்கும் ஸ்டால்கள் பக்கம் போனோமோ, தொலைந்தோம். முன்னெச்சரிக்கையாக ஒரு குழாயிலும் நல்ல தண்ணீர் கிடையாது. வங்காள விரிகுடாதான் பொங்கிப் பிரவகிக்கிறது. 200 மிலி. பேக்கட் தண்ணீர் கிடைக்கிறது. விலை அதிகமில்லை. இரண்டரை ரூபாய்! ஒரு பாட்டில் தண்ணீர் 12 ரூபாய். கொறிப்பதற்கு பாப்கார்ன். ரூ. 5/-. பிஸ்கட், சாக்லட் வகையறாக்களும் உண்டு. என்ன, ஒரு சின்ன ஸைஸ் பச்சை நோட்டு! அட போங்க சார். கொய்யாப் பழம் கெட்ட கேட்டிற்கு மூன்று ரூபாய். மத்தியானம் லன்ச், சற்று பெரிய சைஸ் வத்திப்பெட்டி என்று கருதத்தக்க அழகான வெள்ளைக் காகிதப் பெட்டிகளில். சாம்பார் சாதம் மற்றும் தயிர் சாதம். நாலு வாய் வயிற்றில் இறங்குவதற்குள் டப்பா, தன் வயிற்றைக் காட்டி விடுகிறது. ஒவ்வொன்றும் ஒன்பது ரூபாய்!

● கிரௌண்டுக்குள், மாட்சைத் தவிர அதிகம் கவனத்தை ஈர்த்தவை இரண்டு. 1. ஸைடு ஸ்கிரீன், 2. டிரிங்ஸ் வண்டி.

ஸைடு ஸ்கிரீனில் MRF Zigma விளம்பரம். இந்திப் பட ரகசிய அறைக் கதவு போல அவை, எதிர் எதிர் மூனையில், ஒவ்வொரு ஓவர் முடிவிலும் மூடி மூடித் திறந்தது, அரை டிக்கெட்டுகளுக்குக் கூடுதல் சுவாரஸ்யம்.

அப்புறம் ஒரு மினி ஏரோப் ளேன் ஷேப்பில் அடிக்கடி உள்ளே நுழைந்து, வயிறு பிளந்த டிரிங்ஸ் வண்டி. 'இந்த மாட்ச் முடிந்ததும் இந்த வண்டியை என்ன பண்ணு வார்கள்?' என்று பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு எம்.ஆர். எஃப் பணியாளரிடம் விசாரித் ததில், ''என்ன, எஞ்சினைக் கழட்டிட்டு கொடோன்ல போட்டு வாங்க. வேற எப்பனா மாட்ச் வரும் போது மறுபடி எடுத்து வேற எஞ்சின் மாட்டி நாலு நாள் ஷோ காட்டுவாங்க. ஒருவேளை நல்ல 'மூட்'ல இருந்தாங்கன்னா கிரிக்கெட் கிளப்புக்கே குடுத்தாலும் குடுத்திடு வாங்க.''


* கும்ப்ளே - விக்கெட் வேட்டை
* தனித்துப் போராடிய லூயிஸ்...

● டூட்டி போலீஸ்காரர் ஒருவர் கால்வலி தாங்க முடியாமல் பக்கத் தில் வந்து உட்கார்ந்தார்.


* கபில் : ஐயாயிரம் ரன் மைல் கல்!

''எரநாறு தாண்டிட்டாங்களா?''

''ஆச்சுங்க.''

''எத்தனை விக்கெட்டு போயி ருக்குது?''

''எட்டு ஆயிருச்சி.''

''நாளைக்கு ஒருநாள் ஃபுல்லா இழுத்திரும் இல்ல?''

''சொல்ல முடியாதுங்க.''

''இவங்க மட்டும் ரெண்டு தடவை தொடர்ந்து ஆடறாங்க?''

''பாலோ ஆன்- அப்படித் தாங்க.''

''ரொம்ப 'போங்கு' இல்ல?''

- பா. ராகவன்

படங்கள் : சாரி, பாலாஜி


* எல்க்ட்ரிக் சர 165 அடித்த சசின் 'மான் ஆஃப் தி மாட்ச்' பெறுகிறார்.

# வாசனின் பெருந்தன்மை

சௌகார் ஜானகி

என்னை ஆழமாய் ஒரு பார்வை பார்த்தார் வாசன். ''ஏன் மயங்கி விழுந்தே? என்ன பிரச்னை உனக்கு? பயப்படாமல் சொல்லு...'' என்றார்.

அவ்வளவு வெளிப்படையாகவும் கனிவாகவும் அவர் பேசுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. என் கஷ்டங்களைக் கொட்டி விடத் துடித்தாலும் வார்த்தைகள் வெளிவர மறுத்தன. நான் மௌனமாய் நிற்பதைப் பார்த்து விட்டு அருகிலிருந்த ஜெமினி கணேசன் பக்கம் திரும்பினார்.

''இவங்களுக்கு என்ன அமவுண்ட் பேசியிருக்கோம்?'' என்றார்.

''ஏழாயிரத்து ஐந்நூறு ரூபாய்'' என்றார் ஜெமினி. (அதற்குள் சம்பளம் உயர்ந்து விட்டிருந்தது!)

தொடர்ந்து, ஜெமினி கணேசன் என் குடும்பச் சூழல் பற்றி வாசனிடம் விளக்கினார்:

''இவங்க இரண்டு சின்னக் குழந்தைகளை வைச்சுக்கிட்டு ரொம்ப கஷ்டப் படறாங்க. குடும்பத்துல வறுமை... உடம்பு ரொம்ப பலஹீனம்...''

''அப்படியானால் நாம பேசின தொகையில இன்னும் எவ்வளவு பாக்கியோ அதை முழுக்க இவங்ககிட்டே குடுத்துடு...'' என்றார் வாசன்.

அந்த வாக்கியத்தின் முழு அர்த்தம் என்னுள் பதிவாவதற்கு முன் என் பக்கம் திரும்பிச் சொன்னார் :

''இதோ பாரும்மா! நீ சினிமாவுல ஹீரோயின். அதுக்குத் தகுந்த மாதிரி உடம்பை நல்லாவும் ஆரோக்கியமாவும் வைச்சுக்கணும். ரொம்ப நல்லா நடிக்கறே; கீப் இட் அப்! ஆனால் கூடவே உடம்பையும் கவனிச்சுக்கணும்...''

ஒரு தந்தையின் பரிவோடு அவர் சொன்னதைக் கேட்டு நெகிழ்ந்து போனேன்.

''ரொம்ப ஸாரி சார்! என்னால் உங்களுக்குப் பிரச்னையாகி விட்டது. குடும்பத்துல நான் ஒருத்திதான் சம்பாதிக்கிறேன். சாப்பாட்டுச் செலவு கூட சிக்கனமாகத்தான் செய்ய முடியும். அதனால என் சாப்பாட்டைக் குறைச்சுக்கிட்டு என் குழந்தைகளுக்கு நல்ல உணவு குடுக்க வேண்டியிருக்கு... இனிமேல் இது மாதிரி நடக்காமல் கவனமாப் பார்த்துக்கறேன்'' என்றேன்.

சினிமா உலகில் ஒருவர் ஒத்துழைப்புக் குறைந்தாலும் சங்கிலித் தொடராக எப்படி பாதிப்புகள் ஏற்படும் என்பதை அன்று நன்றாகவே உணர்ந்து கொண்டேன். அதற்குப் பிறகு யாருக்கும் என்னால் துளியும் காலதாமதமோ நேர விரயமோ ஆகாமல் மிக மிக ஜாக்கிரதையாக இருந்து வந்தேன்.

'' 'சௌகார்' படத்தில் நடித்த பெண் ஜெமினி தயாரிப்பிலும் நடிக்கிறாள்'' எனக் கேள்விப்பட்ட சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் நிறுவனத்தார் என்னைத் தங்கள் படத்துக்கு புக் செய்ய முன்வந்தார்கள்.

அவர்கள் எடுக்க இருந்த படம் 'வளையாபதி'. இதற்குப் பாவேந்தர் பாரதிதாசன்தான் வசனம் எழுதுவதாக இருந்தது. 'கவிநயம் மிக்க தமிழ் வசனங்களைத் தெலுங்குப் பெண்ணான என்னால் சரியான உச்சரிப்பு, ஏற்ற இறக்கங்களுடன் பேச முடியுமா?' என்ற சந்தேகம் வந்து விட்டது தயாரிப்பாளர்களுக்கு.

மாடர்ன் தியேட்டர்ஸ் சார்பாக என்னை அணுகியவர்களிடம் ''உங்களுக்குச் சந்தேகமிருந்தால் ஒரு டெஸ்ட் எடுத்து விடுங்கள்'' என்றேன். அதன் பேரில், சேலத்திலிருந்து ஒருவர் சென்னை வர, அவர் தந்த நீளமான தமிழ் வசனத்தைத் தெலுங்கில் எழுதிக் கொண்டு, மனப்பாடம் செய்து பேசிக் காட்டினேன். அவருக்குப் பரமதிருப்தி.

'வளையாபதி' படத்தில் கதாநாயகியாக 'புக்' ஆகி 'ஒன் மினிட் டயலாக்' எனப் பிற்காலத்தில் புகழ்பெற்ற, ஒரு நிமிட நேரம் நீடித்த வசனங்களைப் பேசி நடித்தேன். அந்தப் படத்தில் என்னுடன் கதாநாயகனாக நடித்தவர் முத்துகிருஷ்ணன். 'வளையாபதி முத்துகிருஷ்ணன்' என்றே அவருக்குப் பிற்காலத்தில் பெயர் வந்து விட்டது!

'நல்ல படம்' என்று பெயர் வாங்கினாலும் 'வளையாபதி' எதிர்பார்த்த அளவுக்கு வெற்றி அடையவில்லை. இதற்கு ஒரு முக்கியமான காரணம் இருந்தது :

பராசக்தி படம் வெளியான அதே தினத்தில்தான் வளையாபதியும் ரிலீஸ் ஆனது! பராசக்திக்கு எத்தகைய வெற்றி கிடைத்தது என்பது தெரிந்தவர்கள் வளையாபதியால் அதனுடன் ஏன் போட்டி போட முடிய வில்லை என்பதைப் புரிந்து கொள்வார்கள்.

பராசக்தியை இயக்கிய கிருஷ்ணன் - பஞ்சுவின் இயக்கத்தில் சில காலம் சென்று நான் நடிக்க நேர்ந்தது - 'அன்னை' படத்தில். அப்போது பஞ்சு அவர்கள் வளையாபதி பற்றி ஒரு சம்பவத்தை நினைவு கூர்ந்தார் :

வளையாபதியைப் பார்த்த பின் கலைஞர் கருணாநிதியும் அறிஞர் அண்ணாவும் ''இந்தப் படத்தில் கதாநாயகிக்கு 'டப்பிங்' குரலா?'' எனக் கேட்டிருக்கிறார்கள். என் சொந்தக் குரலிலேயே பேசி நடித்திருக்கிறேன் என அறிந்து, ''அப்படியா! ரொம்பப் பிரமாதமாக வசனம் பேசி இருக்காங்களே!'' என ஆச்சரியத்துடன் பாராட்டியிருக்கிறார்கள்.



* ஜெமினி வாசன்



* கிருஷ்ணகுமாரி

**வ**ளையாபதிக்குப் பிறகும் வாய்ப்பு உடனே கிடைக்கவில்லை. மீண்டும் எதிர்காலம் பற்றிய கேள்விக் குறி - பயம்! படிப்போ மிகக் குறைவு. ஒருமுறை அரிதாரம் பூசி விட்டால் வேறு வேலை கிடைப்பதே அரிது. மூன்று படங்களில் நடித்து நல்ல பெயர் வாங்கி, திறமையை நிரூபித்து விட்ட பிறகு, பட நிறுவனங்களின் படியேறிச் சென்று வாய்ப்புக் கேட்கவும் நான் விரும்பவில்லை. என் திறமைக்குச் சவால் விடும் சிறந்த பாத்திரங்களில் தான் நடிக்க வேண்டும் என்ற வைராக்கியமும் வந்து விட்டது. அத்தகைய வாய்ப்புக்கள் வரும் வரை குடும்பக் கஷ்டங்களைச் சமாளித்துக் கொண்டு பொறுமையாயிருக்கப் பழகிக் கொண்டேன்.

இதற்கிடையில் சினிமா, அதன் மூலம் கிடைக்கும் புகழ், வருமானம் இவற்றைக் கண்கூடாகக் கண்ட என் தங்கை கிருஷ்ணகுமாரி தானும் சினிமாவில் நடிக்க ஆசைப் பட்டாள். என்னை விட உயரமாக, பார்க்கப் பளிச்சென்றிருப்பாள். ஜெமினி நிறுவனத்தின் நடனப் பெண்கள் குழுவில் மாதச் சம்பளத்துக்குச் சேர்ந்தாள். 'நவ்விதே நவரத்னாலு' என்ற படத்தில் ஹீரோயினாக நடிக்க வாய்ப்பு சீக்கிரமே கிடைத்தது.

ஒரே வீட்டில் அக்காவும் தங்கையும் குடியிருப்பது ஆரோக்கியமான சூழலுக்கு இடம் தரவில்லை என்று எனக்குத் தோன்ற ஆரம்பித்தது. என் கணவரிடம் இக் கருத்தைத் தெரிவித்த போது, அவரும் அதை ஏற்று வேறு வீடு பார்க்கலாம் என முடிவு செய்தார்.

ஆனால் எங்களுக்கு வாடகைக்கு வேறு வீடு சுலபத்தில் கிடைக்கவில்லை. சினிமா நடிகை என்றதுமே கண்டிப்பாக மறுத்தார்கள் வீட்டுக்காரர்கள்.

**எ**ன் கஷ்டத்தை ஜெமினி கணேசனிடம் ஒருநாள் சொன்னேன். அவர் ''உன்னைப் பார்த்தால் ரொம்ப பரிதாபமாக இருக்கு...'' என்றதோடு நின்று விடாமல், தமது காரிலேயே ஒருசில வீடுகளுக்கு என்னை அழைத்துச் சென்று காட்டினார். அவற்றில் எதுவும் சரிப்பட்டு வரவில்லை.

ஒருநாள், ''ஆயிரம் விளக்குப் பகுதியில் ஒரு வீட்டின் கீழ் போர்ஷன் காலியாய் இருக்கிறது. மேலே ஒரு நடிகைதான் குடியிருக்கிறாள். அந்த வீட்டைப் போய்ப் பார்க்கலாமா...?'' என்றார் ஜெமினி.

ஒரே வீட்டில் இரண்டு நடிகைகள் இருக்க வேண்டாம் என்பதற்காகத்தானே வேறு வீடே தேடிக் கொண்டிருந்தேன்! இதை ஜெமினியிடம் முகத்தில் அடித்தாற் போல் சொல்ல விருப்பமின்றி அவர் குறிப்பிட்ட வீட்டுக்குச் சென்றேன்.

அங்கு குடியிருந்த நடிகை மின்னல் போல பளீரென்று தோன்றினார். பிற்காலத்தில் நாங்கள் இருவரும் நெருங்கிய சிநேகிதிகள் ஆனோம்...

(தொடரும்)

படம் உதவி :

ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்



✱ பலன் பெறும் குழந்தைகள்

மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகள் பிறந்தால், 'பூர்வ ஜன்ம பாவத்தின் விளைவு' என்று விதியை நொந்து கொண்டு பெற்றோர்கள் பேசாமல் இருந்து விடும் காலம் மாறி விட்டது. இத்தகைய குழந்தைகளும் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளக் கற்றுக் கொண்டு கௌரவமாக வாழ வேண்டும் என்ற கருத்து பரவலாகி, அதற்குக் கம்ப்யூட்டரின் துணையையும் நாடும் காலம் வந்து விட்டது.

சராசரி குழந்தைகளின் நடையுடை பாவனைகளை ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கலாம்:

● உடல் உறுப்புக்களின் இயக்கம் - (உம்.) கை கால்களை அசைப்பது.

● சுய உதவி - (உம்:) தானாகவே பால் குடிப்பது போன்ற தேவைகளைப் பூர்த்தி செய்வது.

● மொழி - வார்த்தைகள் பேசாவிட்டாலும், பிறந்தது முதலே குழந்தை எழுப்பும் ஒலிகள், உணர்ச்சி வெளிப்பாடுதான்.

● புரிந்து கொள்வது - (உம்:) தாயின் முகம், இருட்டு, வெளிச்சம் போன்றவற்றை அடையாளம் காண்பது.

● உறவாடுவது : (உம்:) முகம் பார்த்துச் சிரிப்பது.

பிறந்தது முதல் ஒவ்வொரு காலகட்டத்திலும் குழந்தையின் இந்த ஐந்து இயக்கங்களும் படிப்படியாக வளர்ச்சியடைகின்றன. சராசரி இந்தியக் குழந்தை, எந்தெந்த பருவத்தில் என்னென்ன இயக்கங்களை எந்த அளவுக்குச் செய்ய வேண்டும் என்பது, மிகத் துல்லியமான ஆராய்ச்சிக்குப் பிறகு நிர்ணயிக்கப்பட்டது. இதற்காக ஏராளமான குழந்தைகளின் இயக்கங்களைக் கூர்ந்து கவனித்து, டாக்டர் நந்தினி முந்த்ருர், பேராசிரியர் ஜெயசந்திரன் போன்ற நிபுணர்களுடன் இணைந்து உழைத்தவர் ஜெயா கிருஷ்ணசாமி.

இவ்வாறு தயாரிக்கப்பட்ட விவரப் பட்டியல் கம்ப்யூட்டருக்குள் செலுத்தப் பட்டது. அதன் பின்னர், இந்த சராசரி இயக்கங்களைச் செய்யாத குழந்தைகளுக்கு எப்படி, எந்த அளவுக்கு உதவலாம் என்ற விவரமும் கம்ப்யூட்டருக்குள் செலுத்தப் பட்டுள்ளது.

உதாரணமாக இரண்டாம் மாதத்தில் கை கால்களை உதைத்துக் கொள்ள வேண்டிய குழந்தை அவ்வாறு செய்யவில்லையெனில் அதற்கு எத்தகைய உதவி அளிக்கப் பட வேண்டும் என்பதை கம்ப்யூட்டர் துல்லியமாகச் சொல்லி விடும்... அதன்படி கை கால்களை மடக்கி, பயிற்சி அளிப்பார்கள்.

# மலர் மாலையாகும் சின்னச் சின்ன அரும்புகள்!



✱ பலம் பெறும் பெற்றோர்...

'உபநயன்' என்ற பெயரையுடைய இந்த புரோக்ராம் புத்தக வடிவத்திலும் (ஆங்கிலத்தில்) வெளியிடப்பட்டுள்ளது - கம்ப்யூட்டர் வசதியில்லாதவர்களின் உபயோகத்துக்காக - மிக சிரத்தையாக வரைபடங்களும் புகைப்படங்களும் சேகரிக்கப்பட்டு, எளிமையாகவும் நேர்த்தியாகவும் தயாரிக்கப்பட்டுள்ளது 'உபநயன்'. மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்காக நடத்தப்படும் வேறு பல மையங்களும் 'உபநயன்' புரோக்ராமை கேட்டு வாங்கி உபயோகிக்கின்றன.

இவ்வாறு பெரிய சமுதாயத் தொண்டு ஆற்றி வருவது, சென்னையிலுள்ள ஒரு எலக்ட்ரானிக்ஸ் தொழில் நிறுவனமாகிய ''இன்ட்கெம்''மின் ஆராய்ச்சிப் பிரிவு. (கெம்ப்ளாஸ்ட் க்ரூப்பைச் சேர்ந்தது.) Maduram Narayanan Centre for Exceptional Children என்ற மையத்தில் குழந்தைகள் பயிற்சி பெறுகிறார்கள்.

**எ**ன்னதான் கம்ப்யூட்டர் உதவி இருந்தாலும், ஒரு அசாதாரண குழந்தைக்கு உதவ அசாத்திய பொறுமையுடன், மனோதிடமும் அன்பான அணுகுமுறையும் வேண்டுமல்லவா..?

மதுரம் நாராயணன் மையத்தில் இவையெல்லாம் தாராளமாகவே இருப்பதைக் காண முடிந்தது.

விமானப் படையிலிருந்து ஓய்வு பெற்றதும் ஏர்-வைஸ்-மார்ஷல் வி. கிருஷ்ணசாமி இன்ட்கெம்மின் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி பிரிவில் சேர்ந்தார். இதுவரை உபயோகித்திராத புதிய துறையில் கம்ப்யூட்டர் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கில், அசாதாரண குழந்தைகளுக்காக அதைப் பயன்படுத்த

✱ ஜெயா, விமலா



✱ கிருஷ்ணசாமி



முற்பட்டார். அவர் மனைவி ஜெயா கிருஷ்ணசாமி இருபது ஆண்டுகள் ஆசிரியையாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அவரும் கணவருடன் இணைந்து செயல்படலானார். லட்சிய நோக்கும் கனிவும் படைத்த இந்த தம்பதியின் மேற்பார்வையில்தான் இன்று இந்த மையம் இயங்கி வருகிறது.

அசாதாரண குழந்தைகளைக் கையாள்வதில் சிறப்புப் பயிற்சி பெற்றுள்ள விமலா கண்ணன் இந்த மையத்தின் தலைவியாக விளங்கி கண்டிப்பும் கனிவும் கலந்த விதத்தில் செயல்படுகிறார்.

மற்ற மையங்களுக்கும் மதுரம் நாராயணன் மையத்துக்கும் இடையே ஒரு மிகப் பெரிய வித்தியாசம் :

இந்த மையத்தில் குழந்தைகளுக்குப் பயிற்சி அளிக்க பெற்றோர்களே பயிற்றுவிக்கப்படுகிறார்கள். குழந்தையுடன் கூடவே இருந்து கற்கிறார்கள். குழந்தைகளுக்கு மட்டுமின்றி, அவர்களுடன் வரும் தாய்மார்களுக்கும், யோகாசனம், கைவினைப் பொருட்கள் தயாரிப்பு, பஜனை கீதங்கள் பாடுவது போன்றவற்றில் பயிற்சி அளிக்கப்படுகிறது. மன அழுத்தத்தைக் குறைத்து நல்ல சூழலை இது உருவாக்குகிறது. இந்தத் தாய்மார்கள் ஒரு நூலகம் நடத்துவதோடு ஒரு பத்திரிகையும் வெளியிடுகிறார்கள்.

முதல் சில நாட்களுக்குத் தம் குழந்தைக்குப் பயிற்சி அளித்துப் பழகிய பின் பிற குழந்தைகளுக்கு உதவவும் இத் தாய்மார்கள் பழக்கப்படுத்தப்படுகிறார்கள்.

இதன் மூலம், தன்னைப் போல் வேதனைப்படும் வேறு பலரும் உள்ளார்கள், என்ற உண்மை விளங்க, அந்தக் கஷ்டத்தைத் தாங்கிக் கொள்ள பலம் பெறுகிறார்கள். எனவேதான் தாய்மார்கள் நடத்தும் 'கல்பதரு' என்ற பத்திரிகையில், கமலாவின் அம்மா இந்தக் கவிதையை எழுத முடிந்திருக்கிறது.

... நம் போல் இன்னும் எத்தனை பேரோ?

*காலம் கடக்குமுன் தேடிக்*
*கரை சேர்ப்போம் வா!*

*வாழ்க்கை பறித்துப் போட்ட*
*இந்த சின்ன அரும்புகளை*
*நாம் மணம் வீசும்*
*மலர் மாலையாக்குவோம் வா!*

*முடியாது என்ற வார்த்தையை*
*நம்முடைய அகராதியில் இருந்து*
*நீக்கிவிட நாம்*
*தோளோடு தோள் சேருவோம் வா!*

**- சீதா ரவி**

**புகைப்படங்கள் : பாலாஜி**





# மவுண்ட்பேட்டன் இவரை மறக்கவில்லை!

"ஒரு சின்ன விஷயம்னா கூட கமிஷனர் லெவல்ல லெட்டர் குடுத்தாத்தான் காரியம் நடக்கும் போலிருக்கே..."

- ஒரு காவல் நிலையத்தில் உத்வேகத்தோடு ஒலித்த இந்தக் குரலுக்குரியவர்.... டாக்டர் டி. எஸ். ராஜலக்ஷ்மி.

வரதட்சணை கொடுமை வழக்கு தொடர்பாகக் காவல் நிலையத்துக்கு வந்திருந்தார். வயது எவ்வளவு இருக்கும் என்று நினைக்கிறீர்கள்...?

எழுபதைத் தாண்டி விட்டது! குரலுக்குச் சம்பந்தமில்லாத உருவம் - மெலிந்த, குள்ளமான உடல்வாகு, சுருக்கம் விழுந்த முகத்தில் தடிமனான மூக்குக் கண்ணாடி; அதன் வழியே பிறரை ஊடுருவிப் பார்க்கும் கூர்மையான கண்கள்...

பெண்கள் வீட்டை விட்டு வெளியே வரவே தயங்கிய 1940களில் தனியே லண்டன் சென்று படித்து, தத்துவத்தில் டாக்டர் பட்டம் பெற்றார் ராஜலக்ஷ்மி. முதலுதவி, இசை போன்றவற்றிலும் முறையான பயிற்சி மேற்கொண்டு டிப்ளோமா வாங்கினார். இவரது பட்டங்களும் பதவிகளும் அடங்கிய பட்டியல் பக்கம் பக்கமாக நீள்கிறது. உலகப் போர் நடந்த சமயத்தில் முப்படை தளபதிகளுக்கும் பொது ஜனத் தொடர்பு அதிகாரி; லார்ட் மவுண்ட்பாட்டனின் உதவியாளர்; பின்னர் இந்திய அரசின் சிறு சேமிப்புத் துறையில் உதவிச் செயலர்; இருபது அம்சத் திட்டத்தின் செயலர் எனப் பல முக்கிய பதவிகளை வகித்தார்.

டாக்டர் ராஜலக்ஷ்மியின் அப்பா ஸ்ரீநிவாஸன் ஜில்லா கலெக்டர்; தாத்தா அன்னமய்யங்கார் சரபோஜி மன்னரிடம் அமைச்சராகப் பணியாற்றியவர். அத்தை ருக்மிணி சென்னைப் பல்கலைக் கழகத்தின் முதல் பெண் பட்டதாரி! இந்தக் குடும்பப் பின்னணி ராஜலக்ஷ்மிக்கு ஆதரவாக இருந்தது. இயற்கையில் அமைந்த இதயக் கோளாறு திருமண வாழ்க்கைக்கு முட்டுக்கட்டைப் போட்டது. சோர்ந்து போகாமல் அறிவையும் திறமையையும் வளர்த்துக் கொண்டு பயனடைந்து பிறருக்

✱ டாக்டர் ராஜலக்ஷ்மி தாம் போற்றிப் பாதுகாக்கும் புகைப்படத்தின் அருகில். படத்தில் சரோஜினி நாயுடு அருகே இருக்கிறார் ராஜலக்ஷ்மி

கும் உதவினார் ராஜலக்ஷ்மி.

"அந்தக் காலம் முதலே ஆண்களுக்கு இணையான பொறுப்புகளை வகித்திருக்கிறீர்களே? எப்படி சாத்தியமாயிற்று? ஆண்கள் உங்களைப் போட்டியாகக் கருதவில்லையா...?"

"இல்லவே இல்லை" என்கிறார் ராஜலக்ஷ்மி. நான் இயல்பாகவே தைரியசாலி. எப்பேற்பட்டவரானாலும் தவறு செய்தால் சுட்டிக்காட்டத் தயங்க மாட்டேன். அதே நேரத்தில் நலிந்தோரின் நலன் பேணுவதிலும் பாதுகாப்பு அளிப்பதிலும் முதன்மையாய் இருப்பேன். இதனால் எனக்கு முக்கிய பதவிகள் கொடுக்க யாரும் யோசிக்கவில்லை. அந்தக் காலத்தில் என்னை யாரும் போட்டியாக நினைக்கவும் இல்லை!"

"உங்கள் திறமைக்குச் சவாலாக அமைந்தவை...?"

"நான் ஜார்ஜ் டவுன் பகுதியில் மாஜிஸ்டிரேட்டாக இருந்த சமயம்... கித்தேரி முத்து என்பவன் வண்ணாரப்பேட்டை பகுதியில் பிரபல ரவுடி! குத்துச் சண்டை வீரனும் கூட. இவன் பேரில் பல கேஸ்கள். சம்பந்தப்பட்ட இன்ஸ்பெக்டர் கேட்டுக் கொண்டதன் பேரில் கித்தேரி முத்துவுக்கு எதிராக ஒற்றை ஆளாய்ச் சாட்சி சொன்னதும் இல்லாமல் அவனுக்கு ஏழு வருடக் கடுங்காவல் தண்டனையும் கிடைக்கச் செய்தேன்."

ராஜலக்ஷ்மி லண்டன் சென்றிருந்த சமயம் லார்ட் மவுண்ட்பாட்டனைச் சந்திக்க நேர்ந்தது. பல ஆண்டுகள் கடந்து விட்டாலும் ராஜலக்ஷ்மியை மறவாத மவுண்ட்பாட்டன், அவரைத் தமக்கருகிலிருந்த பிரதம மந்திரி வில்சனிடம் அறிமுகம் செய்து வைத்ததோடு, தமது வீட்டுக்கும் அழைத்து உபசரித்து மகிழ்ந்திருக்கிறார்.

முதல் பெண் தொண்டர்கள் முகாமை (1942), காட்ஃப்ரே என்பவரின் உதவியோடு தமிழ்நாட்டில் துவக்கினார் ராஜலக்ஷ்மி. 'விண்மதி' என்ற பெண்கள் பத்திரிகையையும் ஆரம்பித்து முப்பது ஆண்டுகள் நடத்தினார்.

இன்றும் இருபது வயதுப் பெண்ணின் துடிப்போடு இயங்கும் இவர், தமது வருமானத்தின் பெரும் பகுதியை பொதுநலப் பணிகளுக்கே செலவழித்துள்ளார். தமது சொந்த முயற்சியிலும் செலவிலும் ஒரு கல்லூரி ஆரம்பிக்க, பத்து ஆண்டுகளாகப் போராடி வருகிறாராம். "முயற்சி நிறைவேறவில்லை; ஆனால் நானும் இலேசில் அதைக் கைவிடுவதாக இல்லை.." என்கிறார்.

- கீதா மோஹன்

படம் : கோபிநாத்

## மேலாண்மை பொன்னுச்சாமி மேலும் மேலும் எழுதட்டும்!

**'முற்றுகை' - வாசகர் விமர்சனம் :**

◆ சத்தான கதை. சொற் சிக்கனம், ஜீவன் ததும்பும் பாத்திரங்கள். ஸ்யாமின் ஓவியங்கள் ஒவ்வொன்றும் கதாசிரியருடன் போட்டி போடும் "ஸ்டில்கள்". மொத்தத்தில் மறக்க முடியாத "முற்றுகை".

பம்பாய், அமான்.

◆ சொல்லழகு; எழுத்தின் நடையழகு; பாத்திரங்களின் குணச்சித்திரம்; படிக்கும்போதே அந்தந்தக் காட்சிகளை நேரடியாகக் காணச் செய்யும் எழுத்து வன்மை... மேலாண்மை பொன்னுச்சாமி இன்னும் எழுத வேண்டும் - வாழ்த்துக்கள்!

மாப்பிள்ளைகுப்பம், சி. ஜெயராமன்.

◆ அக்கா புருஷன் நாராயணசாமிக்கு இரண்டாந் தாரமாக வாழ்க்கைப்பட மறுத்த சொர்ணம், தீப்பெட்டி முதலாளி அருஞ்சுனைக்கு இரண்டாந் தாரமாக வாழ்க்கைப்பட எப்படி முடிவெடுத்தாள்? அவளுடைய வைராக்கியம், தைரியம் என்னவாயிற்று? அவள் பழநியைத் திருமணம் செய்து கொள்வது போல் முடித்திருந்தால் நலமாக இருந்திருக்கும் என அபிப்ராயப்படுகிறேன்.

திருவள்ளூர், ந. சுப்பாராவ்.

◆ குளிக்கும் வேளையிலும் பழனியை நினைப்பவளாக சொர்ணத்தைக் காட்டி, நெருக்கடி நேரத்தில் அவன் உதவியை நாடி, கடிதமும் எழுத வைத்து, ஏழை ஹரிஜனக் கிழவனைக் கொடுமைக்காளாக்கும் இழி பிறவிகளாக, நாட்டாண்மையையும் மற்றவர்களையும் சித்திரித்துக் காட்டி, "ஓகோ! கதை ஹரிஜன மேம்பாட்டை எடுத்துக் கூறுவதாக இருக்குமோ?" என்று எண்ண வைத்து, தொடர் கதையைத் 'திடும்' என்று முடித்து விட்டார் நாவலாசிரியர். சொர்ணம் காட்டிய வீரமும், தீரமும் "போர்க் குணமில்லை, நிலப் பிரபுத்வ கர்வம், பண்ணையார் தோரணை" என்று சொல்லிக் கதையை முடித்திருப்பதில் தோழர் மேலாண்மை பொன்னுச்சாமி 'பளிச்'சென்றே தெரிகிறார்.

சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

◆ நாவலின் முடிவு சற்று அதிர்ச்சியானாலும், பழனியின் கடைசி சிந்தனை யின் ஆலாம் நாவல் நிமிர்ந்து நிற்கிறது. பழனியின் பாத்திரம் இன்றைய இளைஞர்களுக்கு விழிப்புணர்ச்சியைத் தூண்டக் கூடியதாகும்.

கோவில்யோத்த மங்கை, சத்தியசந்தன்.



# பாலம்

●● கடந்த ஒன்பது ஆண்டுகளாக MUSCAT, ROYAL OMAN POLICE -ல் பணி புரிந்திருக்கிறேன். Detective Dog Training ல் தேர்ச்சி பெற்றுள்ளேன். எல்லா வகையான நாய்களுக்கும் பயிற்சி அளிக்க இயலும். தேவை யானோர் தொடர்பு கொள்க.

- கே. குணசேகரன்,
சிதம்பரம் நகர்,
செந்துறை 621 714
திருச்சி (மாவ)

●● செயற்கை வைரம் பட்டை தீட்டும் தொழிலைத் தமிழ்நாட்டில் எங்கு கற்றுக் கொள்ளலாம் என்று தெரிவித்தால் மிகவும் நன்றியுடையவளாக இருப்பேன்.

- எஸ். ராஜேஸ்வரி,
பைங்கன் (அஞ்சல்),
நீரமங்கலம் (வழி)
தஞ்சை (மாவ) 614 624

●● என்னிடம் உள்ள CASIO FX-100 கால்குலேட்டரில் உள்ள CRYSTAL DISPLAY UNIT உடைந்து விட்டது. யாரிடமாவது இந்த UNIT உபயோகமின்றி இருந்தால் எனக்குக் கொடுத்து உதவவும்.

- ஜே. கே. ஆதிநாராயணன்,
1-A, மோதிலால் இரண்டாம் வீதி,
மதுரை 625 010.

●● 1973-ல் வெளியான "மழலை அமுதம்" என்ற எனது கவிதை நூல் பிரதியை வைத்திருப்பவர்கள் யாராவது எனக்கு அனுப்பி உதவவும். என் கைவசம் இல்லை ஆதலால் இக் கோரிக்கை.

- மெய்யப்பா அருணாசலம்,
3/50, இலுப்பக்குடியார் தெரு,
கோனாபட்டு - 622 503.



●● சாஷே எனப்படும் பாக்கெட்டுகள் தயாரிக்கும் நபர்கள் தயவு செய்து நான் தயாரிக்கும் திரவ சோப்பை (liquid soap) நிரப்பித் தர முன் வந்தால் நல்லது. நிபந்தனை, விலை விவரங்களுடன் எழுதவும்.

- வஸந்தா சாரி,
449/2 Phase III,
சத்துவாச்சாரி,
வேலூர் - 632 009.

●● நான் I.C.W.A. படிக்க விரும்புகிறேன். தயவுசெய்து கும்பகோணம் வட்டாரத்தில் I.C.W.A. படித்து முடித்தவர்கள், எனக்கு விண்ணப்பப் படிவம், பாடத்திட்டம் போன்ற விவரங்களைத் தந்து உதவ வேண்டுகிறேன்.

- ஆர். பாலா,
2/15, அக்ரஹாரம்,
கிழக்கு கபிஸ்தலம்,
கபிஸ்தலம் (அஞ்சல்) 614 203.

●● ஆங்கிலம், மற்றும் ஆங்கில கருக் கெழுத்து ஆவலுடன் கற்பிக்க முடியும். விரும்புவோர் சுயவிலாசமிட்ட உறை அனுப்பவும் அல்லது நேரில் அணுகவும். எந்தவித பிரதிபலனையும் எதிர்பார்க்க வில்லை.

- ஈ. சக்திவேல்,
வாணிப்ரியா போட்டோ ஸ்டுடியோ,
422, எஸ்.கே.வி. சாலை,
ஈரோடு - 638 009.

●● டேபிள் தராசு (ஸ்கேல்) செகண்டில் தேவைப்படுகிறது. விற்க விருப்பமுள்ளவர் தொடர்பு கொள்ளவும்.

- ஆர். பாலசுப்பிரமணியன்,
ராஜலக்ஷ்மி ஸ்டோர்,
வெள்ளூர் (அஞ்சல்),
முசிறி (வட்டம்) 621 202.

●● கல்கி பொன் விழா மலர், படித்து முடித்து விட்டிருந்தால் - விற்க விரும்பினால் விலை விவரம் தெரியப் படுத்தவும். வாங்கிக் கொள்ள ஆவலாயிருக் கிறேன்.

- அ. முஸ்தபா,
14/B, ராஜம்பேட்டை தெரு,
தக்கோலம் - 631 151.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்.)

வட்டமேஜை

# வெள்ளைப் பணம் வாங்குவோரின் வயிற்றில் அடிக்கலாமா?

**பரிசுக் கடிதம்!**

◆ தராசு பதிலில் 'சூப்பர்ஸ்டார்களைப் பார்த்து ஊதியத்தைக் குறைத்துக் கொள்ளுங்கள்' எனக் கூறுவது அபத்தம் எனக் கூறியுள்ளீர்கள். நன்று சொன்னீர்கள்! அவர்கள் வாங்கும் ஊதியம் முழுவதையும் "வெள்ளைப் பணமாகவே" வாங்கி ஒழுங்காக வருமான வரி செலுத்தி தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுகிறார்கள் அல்லவா? அத்தோடு நின்றார்களா? எஞ்சிய தங்கள் செல்வத்தையும் மகாத்மாவின் "தர்மகர்த்தா கொள்கை"யைப் பின்பற்றி நாட்டு மக்கள் ஏராளமான வேலை வாய்ப்புப் பெற, தொழில்களில் முதலீடு செய்து உள்ளார்கள் அல்லவா? இப்படிப்பட்ட நடிக, நடிகையரின் வயிற்றில் அடிப்பது(?) மிகப் பெரிய பாவமே!

இலால்குடி,
முக. இ. சு. பாலசுப்பிரமணியன்.

◆ டி.வி. விமர்சனத்தில் பிரைம் ஸ்போர்ட்ஸ் சானலை நம்மூர் டி.வி.யுடன் ஒப்பிட்டிருக்கிறீர்களே! நம்மூரில் பல வி.ஐ.பி.க்களுக்கு விமர்சனத்தைத் தாங்கும் சக்தியே கிடையாது. வர்ணனையில் ஏதாவது தமாஷாகச் சொல்ல, அதை நம்மவர்கள் பெரிதாக எடுத்துக் கொண்டு வருணனையாளர்களையே விலாசமில்லாமல் செய்து விட மாட்டார்களா என்ன!

மதுரை,
நெல்லை. வி. சிவா.

◆ ப்ரியா அரோராவுக்கு நல்ல எதிர்காலம் இருக்கு என்பதை அவர் முகமே கூறுகிறது!

திருச்சி - 8,
தமிழமுதன்.

◆ 'அலமு அத்தை! காத்தே இல்லாத இடத்துல பம்பரம் சுத்தறது போல பூமி சுத்திக்கிட்டே இருக்குன்னு சொல்றீங்களே; பூமியைச் சுத்தித்தான் காத்து இருக்கே... எப்படிச் சுத்துது?' - என்று நான் கேட்கவில்லை, படித்துச் சொன்ன போது ஒரு மழலையே கேட்கிறதே!

சென்னை - 14,
எஸ். வாசுதேவன்.

(பூமியைச் சுற்றி ஓர் எல்லைக் கோட்டுக்குள்தான் காற்று (atmosphere) இருக்கிறது. அதற்கு அப்பால் இல்லை. பூமியை ஒட்டியுள்ள காற்று மண்டலம் அதனுடன் சேர்ந்து சுற்றுகிறது. - ஆர்.)

◆ கழகக் கண்மணிகளின் கடற்கரை உளறல்கள், எதையும் தாங்கும் இதயம் படைத்த அமரர் அண்ணாவின் பொறுமையையே சோதிப்பதாக இருப்பதை உணர்த்திய கார்ட்டூன் சிம்ப்ளி சூப்பர்ப்!

கும்பகோணம்,
ஹரிஹரன். கே.

◆ செய்வதற்கு வேலை, கைநிறையக்கூலி, வயிறு நிரம்ப உணவு - தங்கள் தலையங்கத்தில் பளிச்சிடும் இந்த மூன்று முத்துக்களையும், நமது அரசியல்வாதிகள் செயற்படுத்த விடுவதில்லை. செயற்படுத்தினால், கேடிகளே இல்லாமல் கோடிகள் அத்தனையும் பல கோடி மக்களையும் முறையாகப் போய் அடைக்கலமாகும். அப்புறம் அரசியல்வாதிகள் பிழைப்பு?

திருச்சி - 9,
கண்ணம்மா இராமசாமி.

◆ கல்கியின், 14.2.93 இதழின் தலையங்கம், நக்ஸலைட்டுகளுக்கு மட்டுமல்ல. அவர்களை மறைமுகமாக வளர்த்து வரும் நமது அரசியல்வாதிகளுக்கும் நல்ல சவுக்கடி.

சிதம்பரம்,
வி. ஸ்டாலின்.

◆ மணியம் பொறுப்பை வகித்த குடும்பத்தில் பிறந்து, மணி (Money) மேக்கராக இல்லாமல், மேயர் மேக்கராக வாழ்ந்த 'மில்க் மேயர்' ராதாகிருஷ்ண பிள்ளை, சிறந்த நூல்களை எழுதி நூல் மேக்கராகவும் இருந்திருக்கின்றார் என்பதை அறிய முடிந்தது.

தஞ்சாவூர்,
முருகானந்தம்.

◆ பொள்ளாச்சி மகாலிங்கம் என்றால், அவர் அடியெடுத்து வைக்காத துறையேயில்லை என்ற வகையில் அனைவரும் அறிவார்கள். அவரை உருவாக்கிய அமரர் நாச்சிமுத்து கவுண்டர் அவர்களுக்கும் அந்தக் காலத்திலேயே தொலைநோக்கு உணர்வு இருந்ததை உணர்த்தியது உங்கள் கட்டுரை.

தோட்டக்குறிச்சி,
இரா. வளையாபதி.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர்: வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: சீதா ரவி. நிர்வாக ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம்: 2345624; சர்குலேஷன் மானேஜர்: 2345623; விளம்பரம் - சந்தா: 2345622; டைரக்டர்: 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால்: ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka